# செந்தமிழ்ச் செல்வி



## உள்ளுறை


திருவிளையாடல் சொற்பொழிவு மாநாடு — கசடு
மாண்புமிகு மா. அனந்த நாராயணன் அவர்களின் நற்றமிழ் வாழ்வு — கடுரு
நீதிபதி மா. அனந்த நாராயணன் மறைவு — கடுக
ஆட்சிமொழித் துணுக்குகள்-4 — ககக
முத்தமிழ்ச் சேத்திர மதுரபாற்கர தாசர் — ககூச
அவ்வே மாத்திரை — ககூஎ
தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்கு முன்னோடி சை.சி.நூ.கழகமே! — கஎ0
தொல்காப்பியர் கூறிய வடசொல் — கஎரு
ஆனையூர் குடைவரைக் கோயில் — கஎஎ
சப்பானியப் பேரறிஞரின் கடிதம் — கஎக
குறி கூறும் மகளிர் — கஅ
" கள் " விகுதி — கஅ
நான் கண்ட நல்லாசிரியர் — கஅ
செய்திகளும் குறிப்புக்களும் — கஅ
மதிப்புரை — ககூ



சிலம்பு-டுசு] வள்ளுவர் ஆண்டு-உ0கஉ, கார்த்திகை Dec. '81 [பரல் – ௩

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---

தமிழிசை மன்னர்

## சுந்தரமூர்த்தி ஓதுவார் நினைவு விழா



அக்டோபர் 11, 12ஆம் நாள்களில்
சைதை சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் திருமணமண்டபத்தில்
இவ் விழா நடைபெற்றது.
படத்தில் ஓதுவார் மூர்த்திகள் ஊர்வலக்காட்சியைக் காணலாம்.

# திருவிளையாடல் சொற்பொழிவு மாநாடு

## (மதுரை 11, 12-11-'81)



அறநிலையத்துறை அமைச்சர்
மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள் தொடக்க உரை நிகழ்த்துகிறார்
கழக ஆட்சியரும் டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்களும்
படத்தில் காணப்பெறுகின்றனர்.



டாக்டர். வ. சுப. மாணிக்கம் அவர்கள் சொற்பொழிவு நூலை வெளியிட
மீனாட்சி அம்மன் கோயில் அறங்காவலர்க்குழுத் தலைவர்

செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ருசு | திருவள்ளுவர் ஆண்டு உ0கஉ, கார்த்திகை டிசம்பர் 1981 | பரல் ச |
|---|---|---|

# திருவிளையாடல் சொற்பொழிவு மாநாடு

அண்மையில் நடைபெறவிருக்கும் கழக மணிவிழாவின் முன்னோடி நிகழ்ச்சி எனத்தகும் திருவிளையாடல் சொற்பொழிவு மாநாடு, இறைவன் திருவிளையாடல்கள் புரிந்த மதுரை மாநகரில், கடந்த நவம்பர்த் திங்கள் 11, 12ஆம் நாள்களில், அருள்மிகு அங்கயற்கண்ணியம்மை திருக்கோயில் திருமண மண்டபத்தில் மிகச் சீரும் சிறப்புமாக நடந்தேறியிருக்கிறது.

இம் மாநாட்டினைத் தமிழ்நாட்டுச் செய்தி அறநிலையத்துறை அமைச்சர் **மாண்புமிகு இராம. வீரப்பன்** அவர்கள் தொடங்கி வைத்து நீண்டதொரு சொற்பொழிவினை ஆற்றியதோடு கழகப் பணிகளையும் பாராட்டியுள்ளார். நம்முடைய மதிப்பிற்குரிய மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத் துணைவேந்தர் **டாக்டர் வ. சுப. மாணிக்கம்** அவர்கள் சொற்பொழிவு நூலை வெளியிட்டு அரிய பெரிய உரையாற்றிக் கழகத்தின் தமிழ்ப்பணி சிவப்பணிகளைப் பாராட்டியுள்ளார்கள். விழாத்தலைவர் **டாக்டர் சுப. அண்ணாமலை** அவர்கள் விழாவிற்கு வர இயலாத சூழ்நிலை ஏற்பட்ட போதிலும், அவரது இடத்தை இட்டு நிரப்பும், பொறுப்பினை ஏற்று நடத்த நம் கழக நூலாசிரியருள் ஒருவரும், ஆங்கிலம் அருந்தமிழ் இரண்டிலும் நல்ல புலமை பெற்றவரும், சிறந்த பேச்சாளரும், எழுத்தாளருமான **டாக்டர் கு. பரமசிவம்** அவர்கள் வாய்த்தமையும், அப் பொறுப்பினை அவர்கள் ஏற்று நடத்திய மாண்பினையும் கண்டு நாம் கழிபேருவகை அடைகின்றோம்.

அடுத்து, மாநாட்டில் உரையாற்றிய பேராசிரியர் பதினொரு வரும் தாம்தாம் பேச எடுத்துக்கொண்ட பொருளிலே நின்று

திட்ப நுட்பம் செறிந்த அரிய சொற்பொழிவுகளால் கேட்டோரை மகிழச்செய்த மாட்சியும் குறிப்பிடத்தக்கது.

இம் மாநாடு சிறப்புற நடைபெற அங்கயற்கண்ணியம்மை திருக்கோயில் திருமண மண்டபம் நமக்குக் கிட்டுமாறு செய்த வரும் சொற்பொழிவு நூலினைப் பெற்றுக்கொள்ளுமுகத்தான் அரிய கருத்துக்களை வழங்கியவருமான அறங்காவலர் குழுத் தலைவர் உயர்திரு வி. என் சிதம்பரம் அவர்கட்குக் கழகத்தின் நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம். அங்ஙனமே திருவிளை யாடல் சொற்பொழிவாற்றிய பேராசிரியர் அத்துணைபேருக்கும் நமது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

தொடக்க உரை, தலைமை உரை, நூல் வெளியீட்டுரை, நூலினைப் பெற்றுக்கொண்டவர் உரை ஆகிய அனைத்தும் திரு விளையாடல்பற்றிய விரிவான பேச்சாக அமைந்திருப்பதாலும், திருவிளையாடல் சொற்பொழிவுகள் நூல் வடிவில் தனியே வெளி யிடப் பெற்றிருப்பதாலும், விரிவஞ்சி ஈண்டு அவர்தம் உரைச் சுருக்கங்களை மட்டும் வெளியிடுகின்றோம்.

## விழா நிகழ்ச்சிகள்

**வரவேற்புரை :**

கழகப் பொது மேலாளர் திரு. இரா முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப் அவர்கள் அனைவரையும் வரவேற்று ஆற்றிய உரைச் சுருக்கம் :

"அறுபது ஆண்டுகளுக்கு முன்னால் இக் கழகத்தைத் தோற்றுவித்தபோது, இஃது இத்துணை வளர்ச்சியடைந்து இவ்வளவு அரிய பணிகளை ஆற்ற முடியுமென்று யாருமே எண்ணி இருக்க முடியாது. இதுகாறும் கழகம் செய்திருக்கும் பணிகள் உண்மையிலேயே அது தமிழன்னைக்குச் செய்த பெருந் தொண் டாகும்.

"இந்த அறுபதாண்டுக் காலத்தில் நம்முடைய கழக ஆட்சியர் அவர்கள் முதலில் கழக முகவராகவும், பின்னர்க் கிட்டத்தட்ட முப்பத்தாறுண்டுக் காலம் ஆட்சிப்பொறுப்பாளராகவும் இருந்து இத்தகைய தமிழ்ப்பணிகளைத் தொடர்ந்து ஆற்றி வருகின் றார்கள். அவர்களுக்குத் தமிழகம் பெரிதும் கடமைப்பட்டிருக் கிறது எனலாம். புத்தக வெளியீட்டுப் பணியை ஒரு தொழிலாகக் கருதாது, நல்ல தமிழ்ப்பணி செய்யவேண்டும் என்னும் நோக்கத் தோடுதான், தென்னிந்திய தமிழ்ச்சங்கம், தென்னிந்திய சைவசித் தாந்த சங்கம் என்று இரண்டு அறநிலையங்களை அமைத்து அவற்

றின் வழியாகப் பல அரிய சாதனைகளைச் செய்துவந்துள்ளது கழகம். இந்த அமைப்புகளின் வாயிலாகத்தான் மறைமலையடிகள் வாழ்ந்த இல்லமாகிய பல்லாவரம் மாளிகையை மறைமலையடிகள் கலைமன்றமாக உருவாக்கியும், சென்னையில் பல்கலைக் கழக ஆய்வாளர்களின் புகலிடம் எனத்தகும் மறைமலையடிகள் நூல் நிலையத்தை உருவாக்கியும் கடந்த இருபத்தைந்தாண்டுகட்கு மேலாகப் பாதுகாத்து வருகின்றது. அதுபோலவே திருநெல் வேலியில் சிவஞானமுனிவர் நூல்நிலையம், குமரகுருபரர் குழந்தை வளர்ப்புப்பள்ளி ஆகியவற்றைப் பல ஆண்டுகளாக நடத்தி வருகின்றது.

"இவ்வளவு அரிய பணிகளை ஆற்றிவரும் கழகம் இலக்கியத் துறையிலே புதிய முயற்சிகளைப் புகுத்தத் துவங்கி, அறிஞர்களின் சொற்பொழிவுகளை நூலாக்க முன்வந்தது. அவ்வகையில், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு ஆகிய வற்றைச் சொற்பொழிவாக்கியும், அதுபோலவே சிற்றிலக்கியங் களுக்கும் சொற்பொழிவுநூல்களை உருவாக்கியும் வந்துள்ளது.

"முன்னர்க் கழகப் பொன் விழாவையொட்டிப் பெரியபுராணச் சொற்பொழிவு நூலினை உருவாக்கினோம் அதுபோலவே, அண்மையில் நடைபெறவிருக்கும் கழக மணிவிழாவையொட்டி இந்தத் திருவிளையாடல் சொற்பொழிவு மாநாடும், சொற்பொழிவு நூல் வெளியீடும் இன்று நடைபெறுகின்றன.

"திருவிளையாடல் சொற்பொழிவுகள் நூல்வடிவு பெற்று இங்கே தயாராக உள்ளது. அதனை நம்முடைய மதிப்பிற்குரிய துணைவேந்தர் டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் வெளியிட இருக்கிறார்கள்.

"இந்தச் சொற்பொழிவுகள்மூலம் அந்தப் புராணத்திலே உள்ள அரிய கருத்துகள் அனைத்துமே சாரமாக வடித்து மிக எளிய நடையிலே எழுதப் பெற்று அழகுற அச்சிடப்பெற்ற நூல் இங்கே உங்களுக்கு வழங்கப்படுகிறது.

"இம் மாநாட்டினை இந்த மீனாட்சியம்மை திருக்கோயிலிலேயே நடத்த வேண்டும் என நாங்கள் விரும்பினோம். ஏனென்றால் திருவிளையாடல் மதுரை மாநகருக்கே உரியது. அது மட்டுமன்று, தமிழ்ப் பொழிவு என்ற காரணத்தால் தமிழ்மக்கள் அனைவருக் குமே இஃது உரிமையுடையதாகும்.

"இச் சொற்பொழிவில் அறிஞர்பெருமக்கள் பன்னிருவர் பங்கு கொள்கின்றனர். ஆனால், நாங்கள் குறித்தபடி இம்

மாநாட்டுத் தலைவர் டாக்டர் சுப. அண்ணாமலை அவர்கள் தம் முடைய கல்லூரிப் பணி தொடர்பாக ஒரு முக்கியமான பணியினை முன்னிட்டு இன்று அவர்கள் தில்லியிலே இருந்தாக வேண்டும். அதற்காகத் தில்லி சென்றுள்ளார்கள். எனவே, அவர்களால் இந்த மாநாட்டில் கலந்துகொள்ள முடியாமற்போயிற்று. ஆனால், பரமசிவனே வந்து நமக்குத் துணை நிற்பதுபோல, டாக்டர் அண்ணாமலை அவர்கள் ஆற்றவேண்டிய பணியை நம்முடைய பேரறிஞர் டாக்டர் கு. பரமசிவம் அவர்கள் ஆற்ற முன்வந்துள் ளார்கள். இதுவும் அந்த இறைவன் திருவிளையாடல் போலும்.

"டாக்டர் கு. பரமசிவம் அவர்களை நீங்கள் நன்கறிவீர்கள். அவர்கள் நல்ல மொழியியல் புலமை உடையவர்கள். அரிய பெரிய நூல்களை ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம் செய்து தந்துள் ளார்கள். அதைப்போலவே இந்த நூலை வெளியிட வந்துள் ளவர் நம்முடைய பெருமதிப்புக்குரிய தமிழ்ப்பேரறிஞர் டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்களாவார்கள். அவர்களையும் நீங்கள் நன்கறிவீர்கள். அவர்கள் நம் கழகத்தோடு நீண்ட நாள் தொடர்புடையவர்கள். கழக ஆட்சியரோடு நெருங்கிப் பழகி யவர்கள். எனவே, அவர்கள் இந்தச் சொற்பொழிவு நூலை வெளி யிடுவது சாலப்பொருத்தமுடையதாகும்.

"அடுத்து, இந்த அரும்பெரும் பணியினை இந்தக் கோயி லிலேயே நடத்துதற்கு நமக்கு இடமளித்து எல்லா உதவிகளை யும் செய்தவர்கள் நம்முடைய மதிப்பிற்குரிய அறங்காவலர் குழுத் தலைவர் திரு. வி. என். சிதம்பரம் அவர்களாவர். அவர்கள் இந் நூலின் முதற்படியைப் பெற்றுக்கொள்வதும் மிகமிகப் பொருத் தமானதே.

"இப்படியாக இங்கே பரமசிவனாரும், அவர் பக்கத்திலே சிதம்பரம் அவர்களும் மற்றுமுள்ள பேரறிஞர்களுமாகச் சேர்ந்து இந்தத் திருவிளையாடல் சொற்பொழிவு மாநாட்டினைச் சிறப்புறச் செய்யும் காட்சி மிகச் சிறந்த ஒரு காட்சியாகும்.

"அதைப்போலவே, இங்கே சொற்பொழிவாற்றப் பதினொரு பேரறிஞர்கள் வந்துள்ளார்கள். அவர்களெல்லாம் இன்றும் நாளையும் அரிய சொற்பொழிவுகளை ஆற்ற இருக்கின்றனர். அவர் களையும், மாநாட்டிற்கு வந்திருக்கும் உங்களனைவரையும் வருக! வருக! என உளமார மகிழ்வோடு வாழ்த்தி வரவேற்பதோடு நீங்கள் அனைவரும் இம் மாநாட்டினைச் சிறப்பாக நடத்தித்தரு மாறும் அன்புடன் கேட்டுக்கொள்ளுகிறேன்"

**தொடக்கவுரை :**

தமிழ்நாட்டுச் செய்தி, அறநிலையத் துறை அமைச்சர் மாண்புமிகு இராம வீரப்பன் அவர்கள் விழாவினைத் தொடங்கி வைத்து ஆற்றிய உரைச் சுருக்கம்:

(இது தொடக்க உரை என்றபோதிலும், அமைச்சர் அவர்கள் விருப்பப்படி மற்றவர்களின் சொற்பொழிவுக்குப் பின் நிகழ்த்தப் பட்டது என்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது)

''சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் சார்பில் கடந்த அறுபது ஆண்டுகளாக நடத்திவருகின்ற தமிழ்ப்பணியினைத் தொடர்ந்து நடைபெறும் திருவிளையாடல் சொற்பொழிவு மாநாட்டு நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ளும் வாய்ப்பினை எனக் களித்தமைக்காக இந்தக் கழகத்தின் ஆட்சியர், பெரியவர், அன்பிற்குரிய வ. சுப்பையா அவர்களுக்கும் மற்றுமுள்ள நிருவாகி களுக்கும் என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன்.

''தமிழ்ப் புலவர்கள் தமிழ்ச் சான்றோர்கள் பதினொருவர் பல்வேறு கருத்துகளை வெளியிடுகின்ற நிகழ்ச்சிகள் இலக்கிய வடிவிலே இங்குத் தரப்படுகிறது. இதைப் படித்துத் தெரிந்து கொள்ளுகிற ஒரு மாணவனாகவே நான் இருக்கிறேன். எனவே, இங்கே பேசுகின்ற அறிஞர்களின் உரைகளைக் கேட்டுத் தெரிந்து கொண்ட பின்னர்ப் பேசுவதே பொருத்தமாக இருக்கும் எனக் கருதி நான் கடைசியில் பேசுகிறேன் என்று இவ் விழா அமைப் பாளர்களிடம் கேட்டுக்கொண்டேன்.

''இங்கே அறிஞர் பலர் ஆற்றிய உரையில், அவர்கள் வெளி யிட்டுள்ள ஆராய்ச்சிக் கருத்துகள் எங்களைப் போன்றவர்களுக் குப் புதியவை. நாங்கள் இப்போதுதான் இத்தகைய இலக்கியக் கருத்துகள் வழங்கும் பள்ளியிலே படிக்க ஆரம்பித்திருக்கிறோம். கற்கவேண்டிய காலத்தையெல்லாம் கடந்துவிட்ட காரணத் தால், கேட்க வேண்டிய காலத்தில் கொஞ்சம் கேட்டுத் தெரிந்து கொள்ள விரும்புகிறோம். 'கற்றலிற் கேட்டலே நன்று' என எங்களுக்காகத்தான் முன்னோர்கள் சொல்லிவைத்தார்கள் போலும்! வள்ளுவரும் 'செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம்' என்றார். எனவேதான், இங்கே பேசிய பெருமக்களின் கருத்து களைக் கேட்டுத் தெரிந்துகொள்ளும் மாணவன் என்ற முறையிலே தான் இறுதியில் பேச விரும்பினேனே யன்றி, இவர்கள் எடுத்துக் கூறாத புதிய கருத்துகளை என்னால் கூற முடியும் என்ற காரணத் தினாலன்று,'' என்றார். மேலும் அவர் பேசுகையில் கழகம்

பெருமாள் எம். ஏ அவர்களும், 'திருவிளையாடல் புராணத்தில் கலை நலம்' என்னும் பொருள்பற்றித் திருவாட்டி மீனுட்சி முருக ரத்தினம், எம்.ஏ., பிஎச். டி அவர்களும், 'திருவிளையாடலில் பா நலனும் அணி நலனும்' என்னும் பொருள்பற்றித் திருவாளர் பண்டித மீ. கந்த சாமிப் புலவர் அவர்களும், 'பரஞ்சோதியாரின் சொல்லாட்சி' என்னும் பொருள்பற்றித் திரு. ம இராமகிருஷ்ணன், எம். ஏ., பி. டி. அவர்களும் 'திருவிளையாடல் முன்னேடி' என்னும் பொருள் பற்றி டாக்டர் தமிழண்ணல் (இராம பெரிய கருப்பன்) அவர்களும், 'இரண்டு திருவிளையாடல்கள்' என்னும் பொருள்பற்றிக் கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன் அவர்களும் அரிய உரையாற்றினர்.

———

## வாழ்த்துச் செய்திகள்

திருவிளையாடல் சொற்பொழிவு மாநாடு அழைப்பிதழ் கிடைத்தது மிக்க மகிழ்ச்சி.

தேர்ந்தெடுக்கப்பெற்றுள்ள சொற்பொழிவாளர்களும் தலை சிறந்த அறிஞர்கள் ஆவர். நிகழ்ச்சிமுறை சிறப்பாக அமைந்திருக் கிறது. விழா இனிது நிறைவெய்தத் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகின்றேம்.

— தவத்திரு குன்றக்குடி அடிகளார்

இறையருளால் மாநாடு மக்களிடையில் சைவமணமும், தமிழ்மணமும் கமழச் செய்யும். அதனைத் தொடர்ந்து கழக மணிவிழா சிறப்புற அமைந்து தமிழ்மக்களின் மன எழுச்சி களுக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கும் என என் மன விருப் பத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

— தி இராசமாணிக்கம், பி.ஏ., பி.காம்., விசாரத்,
கூட்டுறவுச் சங்கங்களின் இணைப்பதிவாளர், சேலம்.

பாடல் அமைந்தநகர் பாரெலாம் போற்றுநகர்
கூடல்மா கோநகர் கூடியதில்—ஆடல்
புரிந்த இறைவன் புகழ்மாநா டோங்கி
வரிந்துவாழ்க, சீராய் மகிழ்ந்து.

— புலவர் பண்ணை சண்முகம்,
பண்ணைக்காடு

மேலும், புலவர் ப. சங்கரலிங்கம், செக்கானூரணி; டாக்டர் வை. இரத்தினசபாபதி, சென்னைப் பல்கலைக்கழகம்; டி. பி. எம். பெரியசாமி, மதுரைத் தமிழ்ச்சங்கம்; திரு. இராமகிருட்டிணன், கோயில்பட்டி; திரு. சங்கரக்குமாரு, கல்லிடைக்குறிச்சி—ஆகி யோரிடமிருந்தும் மற்றும் பல தமிழ் அன்பர்களிடமிருந்தும் வாழ்த்துச் செய்திகள் கிடைத்துள்ளன.

# மாண்புமிகு மா. அனந்தநாராயணன் அவர்களின் நற்றமிழ் வாழ்வு

[நீதிபதி ஆர். சதாசிவம் அவர்கள்]

"அன்பனே! நல்ல மனிதனாக இரு!" என்று ஆங்கில எழுத்தாளர் "சர் வால்டர் ஸ்காட்" என்பவர் தம் மரணத் தறுவாயில் தம் வாழ்க்கை நூல் ஆசிரியரும் மருமகருமாய "லாகார்ட்" என்பவரிடம் கூறிய தொடர் எனக்கின்று நினைவுக்கு வருகிறது.

"பண்புடையார்ப் பட்டுண் டுலகம்" எனும் தொடரில் வள்ளுவர் குறிப்பிடும் பண்பாளர்களுள் மாண்புமிகு அனந்தநாராயணன் அவர்களும் ஒருவர் எனின் அது மிகையன்று.

> "நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
> நல்லார்சொல் கேட்பதுவும் நன்றே—நல்லார்
> குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோ
> டிணங்கி இருப்பதுவும் நன்று"

எனும் ஔவையின் அமுதமொழிக் கேற்ப யான் அவரோடு பழகி வந்துள்ளேன்.

கடந்த ஏப்பிரல் முதல் வாரத்தில் - அவர் பம்பாய்க்குச் செல்வதற்கு முன் அவரைக் கண்டு, உரையாடி, விடை பெற்றுத் திரும்பிய போது, "மீண்டும் அவரை மனித வடிவில் காண முடியாது; கலந்து பழக முடியாது; உரையாடி மகிழ முடியாது" எனக் கனவிலும் நினைத்திலன்.

1—5—1907இல் அவரை—அச் செம்மலைப் பயந்த நற்றாய், செய்தவம் உடைய நீராள்; எம்மலைத் தவம் செய்தாளோ அறியோம்; தந்தையும் 'என்நோற்றானோ' அறியோம்; அவர் பிறந்த குடி ஒரு நற்குடி என்பதிற் சிறிதும் ஐயம் இல்லை. அவர் பிறந்து, தவழ்ந்து, விளையாடும் பேற்றைப் பெற்றது பாலக்காடு.

என் மைத்துனர் டி. எஸ். அழகுசுந்தரத்துடன் அவர் சென்னை மாநிலக் கல்லூரியில் பயின்றார்; ஆங்கில இலக்கியத்தில் பட்டம் பெற்றார்; இங்கிலாந்தும் அவர் திருவடி தீண்டத் தவம் செய்தது போலும்! ஆண்டுச் சென்று ஐ. சி. எஸ். பட்டம் பெற்றார்.

சில ஆண்டுகள் நிர்வாகத் துறையில் பணியாற்றிய அவர், 1936இல் மாவட்ட நீதிபதி பொறுப்பேற்றுப் பல்வேறு மாவட்டங்களில் பலரும் போற்றப் பணியாற்றினர்; 1957இல் சென்னைச் சட்டக் கல்லூரி இயக்குநராக இசையோடு இயங்கினர். சென்னை உயர்நீதி மன்றம் செய்த தவப்பேறு எனக் கருதுகின்றேன்; 1959 ஆகஃச்ட்டில் அதன் நீதிபதியாகப் பொறுப்பேற்று 1966 இல் தலைமை நீதிபதியாகப் பதவி உயர்வு பெற்றார்; 1969இல் ஓய்வு பெறும் வரை தலைமை நீதிபதி பதவிக்கு ஓர் எடுத்துக் காட்டாக, வழக்கறிஞர்களின் வழக்காடும் திறத்தினை மேம்படுத்தும் ஆசிரியராகச், சட்டப் புத்தங்களில் பேசப்படும் சட்டங்களுக்கு உயிரில்லை; ஆனல் அவற்றைக் கையாளும் நீதிபதிகளும் வழக்கறிஞர்களும் உயிர் உடையவர்களே, உணர்வுடையவர்களே; எனும் உண்மை உலகெங்கும் பரவச் சீரிய வகையில் பணியாற்றினர்.

அவரை யான் 1953ஆம் ஆண்டு முதலே நன்கறிந்தவன்; வடார்க்காடு மாவட்டத்தில் அவர் மாவட்ட நீதிபதியாக இருந்த காலத்தில் யான் மாவட்டக் குற்றவியல் நீதிபதியாகப் பணியாற்றினேன். 1961இல் யான் சென்னை உயர்நீதி மன்ற நீதிபதியாகப் பொறுப்பேற்ற காலம் முதல் அவருடன் நெருங்கிப் பழகி நண்பனய்த் திகழும் பேறு பெற்றிருந்தேன். தொடர்ந்து எட்டாண்டுகள் அவரும் நானும் நீதிமன்றத்திற்கு ஒரே வண்டியில் சென்று திரும்புதலை வழக்கமாய்க் கொண்டிருந்தோம். பல்வேறு கூட்டங்களுக்கும் இருவரும் இணைந்தே செல்வதுண்டு.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 7—2—1962இல் சென்னை, மயிலை, உட்லண்சு உணவகத்தில் திரு. மா. சண்முகசுப்பிரமணியம் அவர்கள் எழுதிய "சட்டவியல்" எனும் நூலை என் தலைமையில் அவர் வெளியிட்டமையை ஈண்டுக் குறிப்பிட விரும்புகின்றேன். தாமரைத் திரு. வ. சுப்பையாபிள்ளை அவர்கள் அழைப்புக்கிணங்கி அவரும் யானும் கழகம் நடத்தும் மறைமலையடிகள் நூல் நிலையத்திற்குச் சென்று பார்வையிட்டு வந்துள்ளோம்.

நீதிபதி என்ற வகையில் சட்டத்துறையில் மட்டுந்தான் அவர் உயர்நிலையில் இருந்திருப்பார் என எண்ணுதல் தவறு. பல்வேறு துறைகள் அவரை ஆட்கொண்டு பேரும் புகழும் பெற்றுள்ளன. அவர் கலையுள்ளம் பெற்றவர்; தம் கலையுள்ளத்தைப் பிறருக்கு எடுத்துக் காட்டும் திறமுடையவர்; பல மொழிகளிற் பேசுவதிலும், எழுதுவதிலும் புலமை பெற்றவர்; தம் தாய் மொழியாகிய தமிழிலன்றித் தெலுங்கு, ஆங்கிலம், பிரெஞ்சு

முதலாய மொழிகளிலும் வல்லவர்; இம் மொழிகளிற் செய்யுள் இயற்றும் திறமும் பெற்றவர். அவர் ஆங்கிலத்தில் எழுதிய சில்வர் பில்கிரிமேஜ் (Silver Pilgrimage) எனும் நாவல் அமெரிக்காவில் வெளியிடப்பட்டுள்ளது.

தமிழ், ஆங்கிலம் எனும் இருமொழிகளிலும் அவர் கடல் மடை திறந்ததுபோலப் பேசுவதிலும், எழுதுவதிலும் திறம் பெற்றவர் என்பது நாடறிந்த செய்தி. அவ்வாற்றல் பரம்பரையால் வந்ததா, அவர் மேற்கொண்ட முயற்சியின் விளைவா என்பதனை என்னால் வரையறுத்துக் கூற முடியவில்லை. ஏனென்றால், அவர் தந்தை திரு. மாதவையா அவர்கள் தமிழ் நாவல் உலகுக்கே முன்னோடியாவார். முதல் நாவலை எழுதியவர் அவரே என்பது உலகறிந்த ஒன்று.

இசைக் கலையிலும், பாட்டும், செய்யுளும் புனைவதிலும் அவர் நிகரற்றவர். இனிமையாய்ப் பாடுவதிலும் வல்லவர். தஞ்சை மாவட்ட நீதிபதியாய் இருந்தகாலத்து அவர், திருவையாறு, தியாகராஜ சுவாமிகள் திருவிழாவிலும் முக்கியப் பங்கு கொண்டுவந்திருக்கிறார். அவர் புனைந்த பாடல்களைத் திருமதி சேலம் செயலட்சுமி அவர்கள் பல இடங்களில் பாடியுள்ளார் என்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

ஓவியக் கலையிலும் அவர் வல்லவர்; கைவந்த ஓவியக் கலைஞர்களும் அவர் வரைந்த ஓவியத்தினைப் பெரிதும் போற்றிப் பாராட்டுவர். இத்துணைக்கும் அவர் எந்த ஓவியக் கல்லூரியிலும் பயின்றவர் அல்லர். அத் திறமை அவருக்கு எவ்வாறு வாய்த்ததோ, யான் அறியேன்! அவர் வரைந்த ஓவியங்கள் பலவற்றை யான் கண்டு களித்திருக்கிறேன்; அவை அவருடைய உணர்ச்சிகளையும், கைவன்மையினையும் புலப்படுத்தும் திறத்தைக் கண்டு வியந்திருக்கின்றேன்.

என் மருமகர் டாக்டர். ஏ. எம். செல்வராசு அவர்கள் ஓவியக் கலையில் பெரிதும் ஈடுபாடுள்ளவர். மேற்கண்ட ஓவியருக்கு இவர் மருத்துவராக இருந்திருக்கிறார்; இவருக்கு அவர் தாம் தீட்டிய ஓவியங்கள் சிலவற்றை அன்பளிப்பாகத் தந்துள்ளார். எனக்கு மட்டும் ஒன்றுகூட அளித்தார் அல்லர். "கற்றாரைக் கற்றாரே காமுறுவர்" என்பது பொய்யாகுமா? ஓவியக் கலையில் எனக்குச் சிறிதும் ஈடுபாடில்லை என்பதை நன்கு அறிந்துவைத்தே அவர், தாம் தீட்டிய ஓவியங்களுள் ஒன்றனைக்கூட எனக்குத் தராமல் போய்விட்டார்.

அவரிடம் எனக்கிருந்த மதிப்புக்கு எல்லையே இல்லை; அவரோடு கலந்து பழகும் வாய்ப்புக் கிடைத்ததை யான் பெற்ற பேருகவே கருதினேன். அவருக்கும் என்பால் பெருமதிப்பும், எல்லையற்ற அன்பும் உண்டு.

தவத்திரு இரமணமாமுனிவர் அவர்கள் இயற்றிய உபதேச சாரத்தை அவர் ஆங்கிலத்தில் முப்பது செய்யுள்களாக வடித்துத் தந்துள்ளார். அந்நூலை எனக்கு அன்பளிப்பாய்த் தந்தபோதும், 1924ஆம் ஆண்டு பதிப்பித்த வள்ளலாரின் திருவருட்பாத் தொகுதியை, இறுதியாக அவரை யான் கண்டபோதும் தம் நினைவு அன்பளிப்பாக எனக்கு வழங்கிய போதும் அப் புத்தகங்களில் தம் அன்பு கலந்த பாராட்டினைத் தம் கைப்படவே எழுதியுள்ளார்.

சமயத் துறையையும் அவர் விட்டுவைத்தார் அல்லர்; அதனையும் நுணுகி ஆய்ந்துள்ளார். என்றாலும், அவருக்குக் கோயில் வழிபாட்டில் நம்பிக்கை இல்லை. அந்நிலையை மாற்றும் செல்வாக்கு எனக்கோரளவு இருந்ததென்றே இயம்ப வேண்டும். கோயில் என்றாலே சிதம்பரத்தினைத்தான் குறிக்கும். ஒருமுறை அக் கோயிலுக்கும், வள்ளலார் கட்டிய வடலூர்ச் சத்திய ஞான சபைக்கும் அவரை அழைத்துச் சென்றுள்ளேன்.

அவர் திருவாசகத்திலும், தாயுமானவர் பாடல்களிலும், அருட்பாவிலும் மிக்க ஈடுபாடுடையவர்; அவற்றைத் தேர்ந்து கற்றவர்; அவற்றுள் ஒரு பதிகத்தை எடுத்துக்கொண்டு மணிக் கணக்கில், கேட்போர் தம்மை மறந்து இறையன்பில் ஈடுபடும் வகையில் உரையாற்றும் திறம் பெற்றவர். என் சமய அறிவை யான் வளர்த்துக்கொள்ள இந்நிலையில் அவர் எனக்களித்த வாய்ப்புகள் பல. அவற்றை என்றுமே என்னால் மறக்க இயலாது. கம்பராமாயணம் அவருக்குக் கைவந்த கலை; பிறருக்குப் புலனாகாத நுட்பங்களையெல்லாம் விளக்கிக் காட்டும் வித்தகர் அவர்.

ஒருமுறை யானும் அவரும் திருவாலங்காட்டுக் கோயிலுக்குச் சென்று, இரத்தின சபை ஊர்த்துவ தாண்டவ மூர்த்தி காளிகா நடனத்தைக் கண்டு களித்தோம். திருவாலங்காட்டுக்கருகிலுள்ள பழையனூர் சாட்சி பூதேசுவரர் திருக்கோயில் மண்டலாபிடேக நிறைவு விழாவுக்கு 1—5—1966 ஞாயிறு காலை அவரை அழைத்துச்சென்றேன். ஈராயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்கு முன் சொன்ன சொல்லைக் காப்பதற்காகத் தீப்பாய்ந்த எழுபது வேளாண்மக்களின் திருவுருவங்களைத் தன்னகத்தே கொண்ட மண்டபத்தினை என் தலைமையில் அவர் திறந்து வைத்துப் பேசினார்:

''கவிஞர் கற்பனையிலுதித்தது பழையனூர் கதை என்று எண்ணினேன்; இன்று காலை, இங்குள்ளவற்றைக் கூர்ந்து கவனித்த பின்னர், ஒரு வணிகனுக்காக, எழுபது வேளாளர் சொன்ன சொல்லைக் காக்கத் தீப்பாய்ந்தது உண்மையே என உணர்ந்தேன்; சொல்லே மெய்; மெய்யே கடவுள்; சொல்லைக் காப்பதே மனிதப் பண்பும், தெய்வீகமுமாகும். ஆணுக்கும், பெண்ணுக்கும் கற்புப் பொதுவாகும். கற்பெனப்படுவது சொல் திறம்பாமையே ஆகும்'' என்று தம் பேச்சில் அவர் குறிப்பிட்டது இன்றும் என் செவிகளில் ஒலித்துக்கொண்டே இருக்கிறது.

வணிகனிடத்துக் குறிப்பிட்டவாறு எழுபது வேளாளப் பெருமக்கள் பழையனூரில் தீக்குளித்ததைக் கேள்வியுற்ற தமிழ் நாட்டு முடியுடை மூவேந்தரும் ஆண்டுப் போந்து, உண்மை உணர்ந்து, வியந்து ஒவ்வொருவரும் ஒவ்வொரு வெண்பாப் பாடினராம். அவற்றைக் கேட்டுக் களிப்புற்ற அவ்வரும் தம்மை மறந்து அத்தலத்திலேயே கீழ்க்கண்ட வெண்பாவை இயற்றினார்:

''பொய்யா மொழிகில் புகலரிய சொற்காத்த
வெய்தாமிக் காராளர் வேள்விதனை — ஐயர்வோ
என்னென் றுரைப்பே னெழிற்கூத்தர் கால்கழல்
பொன்னென் றுரைப்பேனிப் போது.''

மூவேந்தர் பாடல்களோடு, இச் சீரிய பாடலும் மணி மண்டபச் சுவரில் எழுதப்பட்டிருப்பதனை இன்றும் சென்று காணலாம்.

தவத் திரு இரமணமாமுனிவர்பால் அவர் கொண்ட ஈடுபாட்டால் இயற்றிய உபதேச சார ஆங்கிலச் செய்யுள் நூலை, மொழி பெயர்ப்பு எனக் கூறுதலை விட மொழியாக்க நூல் எனக் கூறுவதே சாலப் பொருந்துவதாகும். ஒரு சொல்லின் பொருளைப் பிறிதொரு மொழியில் கூறுவது மொழி பெயர்ப்பு; சொல் கருதும் கருத்தினைப் பிறிதொரு மொழியில் அமைப்பது மொழி யாக்கம்.

திரு. ஜெ. கிருஷ்ணமூர்த்தி அவர்களிடம் அவருக்குப் பெரு மதிப்புண்டு; அவர் சொற்பொழிவுகளைப் பல ஆண்டுகள் தொடர்ந்து கேட்டு வந்திருக்கிறார்; நீதிபதியாக இருந்த போதும் ஓய்வு பெற்ற பின்பும் ஏறக்குறையப் பத்தாண்டுகள் திரு. ஜெ. கிருஷ்ணமூர்த்தி சென்டரில் அவர் தலைமை தாங்கி வந்துள்ளார். சுருங்கக் கூறுவதாயின் பத்தி நெறியை விட ஞான நெறியினையே அவர் பெரிதும் விரும்பினார் எனலாம்.

"நீதிமன்ற மொழி, மக்களுக்குப் புரியும் வகையில் அவரவர் தாய்மொழியிலேயே இருத்தல் வேண்டும் என்பதில் கருத்து வேறுபாடு இருப்பதற்கில்லை" என்று அவர் அடிக்கடி சொல்லி வந்திருக்கிறார். சட்டக் கல்லூரிப் பயிற்று மொழியைத் தமிழாக்கு வதற்கு முன்னோடியாகச் "சட்டச் சொல் அகராதி ஒன்றனை உரு வாக்கத் தமிழக அரசு 1957இல் குழு ஒன்றனை அமைத்தது. அவ்வமயம் சட்டக் கல்லூரி இயக்குநராயிருந்த அவரே அக் குழுவின் தலைமைப் பொறுப்பினை ஏற்றுச் சிறந்த வகையில் பணியாற்றினார். திரு. ஆர். பி. சேதுப்பிள்ளை, டாக்டர். மு. வரதராசன், பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரை முதலி யவர் அக் குழுவின் உறுப்பினர்களாக நற்பணியாற்றினர்.

உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதியான பிறகு, அவர் தமிழகச் சட்டத்துறை ஆட்சிமொழி ஆணைக்குழுவிற்குத் தலைவராக விளங்கிச் சட்டச் சொல் அகராதி ஒன்றனையும் வெளியிட் டார். சட்டத்திற்கும் தமிழுக்கும் அவர் செய்த தொண்டு அளவிடற்பாலதன்று.

என் அன்பார்ந்த தம்பி மருத்துவ மாமணி டாக்டர். இரத்தின வேல் சுப்பிரமணியம் அவர்கள் தமிழ் வளர்ச்சி மன்றத்தின் தலை வராய்த் திகழ்ந்து, அதன் சார்பில் மருத்துவமாமணி இரத்தினவேல் சுப்பிரமணியம் செந்தமிழ்க் கல்லூரி எனும் பெயரில் தமிழ்க் கல்லூரி ஒன்றனையும் நடத்தி வருகிறார். அதில் இன்று எம். ஏ. (தமிழ்) வகுப்புகளில் ஐம்பதின்மருக்கு மேற்பட்டவரும், பி. லிட்., வகுப்பு களில் ஐம்பதின்மருக்கு மேற்பட்டவரும் இலவசமாகக் கல்வி பயின்று வருகின்றார்கள். யான் அம் மன்றத்தின் புரவலனாகப் பொறுப்பு வகித்து வருகின்றேன். அவரும் என்னுடன் சேர்ந்து பல ஆண்டுகளாய்த் தொடர்ந்து அப் பொறுப்பை வகித்து வந்தார். இவ்வாண்டு ஏப்பிரலில் அவர் பம்பாய் செல்லும் வரை மன்றப் பணிகளில் பெரிதும் ஈடுபாடு காட்டிவந்தார்.

பல ஆண்டுகள் யான் அவரோடு நெருங்கிப் பழகியதால் பெற்ற நன்மைகளுக்கு அளவே இல்லை. பொதுக்கூட்டங் களுக்கோ, பிறிதோரிடத்துக்கோ செல்வதாயின் இருவரும் இணைந்தே செல்வதுண்டு. என் வேண்டுகோளை ஏற்றுப் பல கூட்டங்களில் அவர் சொற்பொழிவாற்றியுள்ளார். அதனால், எனக்குச் சிறிது இன்னலும் நேர்ந்ததுண்டு. தாம் தாம் நடத் தும் பொதுக் கூட்டங்களிலும், பிற கூட்டங்களிலும் அவரும் கலந்துகொள்ளவேண்டும் என்று ஒவ்வொருவரும் விரும்பு வதுண்டு. அவர்கள் அவருடைய செயலாளர் எனக் கருதி என்னை அணுகுவதும் உண்டு. இச் செயல்களில் எல்லாரையும்

நிறைவு செய்ய முடிவதில்லை. அவருடைய மதிப்புக்கு யான் என்றும் உரியவனாக இருக்க வேண்டும் என்பதே அதற்குக் காரணம்.

நான் ஆங்கிலத்திலும் தமிழிலும் பல கட்டுரைகள் எழுதுவதுண்டு. அவற்றையெல்லாம் அவர் பார்வையிட்டுத் தக்க திருத்தங்களையும் செய்து கொடுப்பார்.

பல்வேறு கோணங்களில் அவர் பெற்றிருந்த அறிவும், ஆற்றலும் அளவில் அடங்குவனவல்ல. நம் தமிழக அரசு அவற்றைப் பயன்படுத்திக்கொள்ளாமை பெரிதும் வருந்தத் தக்கதே.

என்னிடம் அவர் காட்டிவந்த அன்பிற்கும் மதிப்பிற்கும் யான் என்றும் கடமைப்பட்டிருக்கின்றேன். அவர் எனக்குச் சிறந்த நண்பர்; உலகுக்கெல்லாம் வழிகாட்டி; நல்ல மனிதர்; செந்தமிழ்ச் செல்வர்; அவர் வாழ்வு ஒரு நற்றமிழ் வாழ்வு.

பாம்பணைமீது பள்ளிகொண்டுள்ளான் திருமால்; ஆம். அவனேதான் மாண்புமிகு மா. அனந்தநாராயணன், ஐ. சி. எஸ்., அவர்களை 18—11—1981இல் மனித வடிவினின்றும் விடுவித்துத் தன் திருவடி நிழலில் சேர்த்துக்கொண்டு உலப்பிலா இன்பத்தை வழங்கித் தானும் இன்புற்று வருகின்றான். அவன் வாழ்க!

## நீதிபதி மா. அனந்தநாராயணன் மறைவு

தலைமை நீதிபதிகளிடையே ஒரு தலையாய தமிழ்ப் புலவராகவும் தமிழப்புலவர்களிடையே ஒரு தலைமை நீதிபதியாகவும் நிகழ்ந்த உயர்திரு மா. அனந்தநாராயணன் அவர்கள் பம்பாய் மாநகரில் 18—11—81 அன்று, மறைந்தார் என்ற செய்தியறிந்து ஆற்றொணாத்துயர் எய்துகிறோம். இவரது மறைவு தமிழ் மொழிக்குப் பேரிழப்பாகும். தலைசிறந்த ஒரு தமிழ்க் குடும்பத்தைச் சேர்ந்தவர் அவர். முதல் ஐந்து தமிழ்ப் புதினங்களுள் ஒன்றான கமலாம்பாள் சரித்திரத்தை எழுதிய அ. மாதவையா அவர்களின் திருமகனாரான அனந்தநாராயணர் தந்தையின் பெயருக்கேற்பத் தமிழ்ப்பணியில் பேரீடுபாடு கொண்டிருந்தார். ஐ. சி. எஸ். தேர்வு பெற்ற அவர் அரசின் பல்வேறு பணிகளில் ஈடுபட்டு இறுதியாகச் சென்னை உயர்நீதி மன்றத்தின் தலைமை நீதிபதியாக இருந்து ஓய்வு பெற்றார்.

எளிமையே உருவான தோற்றம், புகழுக்கும் பணிக்குமேற்ற பொலிவு, தெளிவான சிந்தனை, நுண்மாண் நுழைபுலம், இவற்றின் மொத்த உருவாகத் தோன்றியவர் அவர்.

சட்டத் துறையில் தமிழ் இடம்பெற வேண்டுமென்று அரும்பாடு பட்டவர். ஆட்சி மொழிச் சட்டக் குழுவின் முதல் தலைவராக அமர்ந்து தனித் தமிழ்ச் சொற்களைக் கொண்ட 'சட்டச் சொற் களஞ்சியத்தை' உருவாக்கியவர் அவர். தமிழில் சட்டங் களை ஆக்குவதற்குப் பெருந்துணையாக நின்றார்.

தமிழில் மாறாத பற்றுக்கொண்டு விளங்கிய அவர் சைவ சித்தாந்தக் கழகத்தின்மேலும் கழக ஆட்சியாளர் செந்தமிழ்ச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள்மேலும் பேரீடுபாடு கொண்டிருந்தார். திரு. மா. சண்முக சுப்பிரமணியம் எழுதிக் கழகம் பதிப்பித்த 'சட்ட இயல்' எனும் நூலை நடுவர் திரு. ஆர். சதாசிவம் அவர்கள் தலைமையில் அவர் 7—2—1962இல் வெளியிட்டார். கழக விழாக்கள் சிலவற்றில் அவர் கலந்து கொண்டு சிறப்பித்தார். மறைமலையடிகள் நூல்நிலையத்தை நடுவர் திரு. ஆர். சதாசிவம் அவர்களுடன் பார்வையிட்டுக் கழகப் பணியைப் பாராட்டினார். கழகத்தின்மீதும் தமிழ்மீதும் அளவு கடந்த பற்றுக்கொண்டிருந்த அவர் பிரிவு தமிழன்னைக்குப் பேரிழப்பாகும். மறைந்த நீதிபதி அவர்களின் குடும்பத்தார்க்கும் நண்பர்கட்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளு கிறோம்.

ஆசிரியர்.

---

## பேரறிவுச்செல்வர் உயர்நீதிமன்ற நீதிபதியாக அமர்ந்து புகழ்பெற்ற மா. அனந்தநாராயணன் அவர்கட்கு நினைவஞ்சலி

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் பதிப்புத்துறை யினையும் அறப்பணித்துறையினையும் நன்கறிந்து போற்றி வந்தவர் மாண்புமிகு மா. அனந்தநாராயணன், ஐ.சி.எசு. அவர்களாவர். சேத்துப்பட்டில் அவர்கள் குடியிருந்த வீட்டுக்கு 1981 அக்டோபரில் பார்க்கச் சென்றிருந்தபோது அவர்கள் பம்பாய்க்குத் தம் மகனோரோடு தங்குவதற்குப் போய் விட்டதாகத் தெரியவந்தது. அவர்கள் இறையடி சேர்ந்த செய்தி 18-11-1981 'இந்து' இதழில் பார்த்து வருந்தினேன். அவர்களோடு நெருங்கிய தொடர்பும் பேரன்புமுடையவரும் எனது நிறைந்த இன்ப அன்பிற்குகந்தவருமாகிய ஓய்வுபெற்ற உயர்நீதிபதி ஆர். சதாசிவம் அவர்களைக் கண்டு எனது ஆற்றாமையைத் தெரிவித்து யான் விரும்பிக் கேட்டதற் கிணங்க அவர்கள் எழுதிக்கொடுத்த வரலாறே மேலே காண்பது. அவர்கட்கு எனது உளமிகு நன்றி.

வ சுப்பையா.

[தமிழ்த் தொண்டர் கோ. முத்துப்பிள்ளை]

## 4. VISITING CARD

Walking Stick என்று ஆங்கிலத்தில அழகாகச் சொல்கின்றோம். ஆனால் கைத்தடி நடப்பதில்லை! நாம்தான் நடக்கின்றோம். W lking Stick நம்முடைய நடைக்கு உதவியாக இருக்கின்றது. இது தளர்ந்துபோனவர்களை நிமிர்ந்து நடக்க உதவி புரிகின்றது இந்தப் பெயருக்கு இலக்கண விளக்கங்கள் இருக்கின்றன. அவை ஈண்டுத் தேவையில்லை இன்னொரு பெயரை எடுத்துக்கொள்வோம். இனிய தமிழிலே "நடைவண்டி" என்று நயமுற நவில்கின்றோம். ஆனால் அந்த வண்டி நடப்பதில்லை! நடந்து பழக உதவி செய்யும் வண்டியாக அது பணியாற்றுகின்றது. வளர் பருவத்தில் உள்ள தளர்நடையினருக்கு நடை பழக்குகிற நல்ல வண்டியாக அது திகழ்கின்றது. இவை போன்ற இன்னொரு தொடர்தான் Visiting card என்பதாகும். இதுவே நாம் எடுத்துக்கொண்டுள்ள இன்றைய தலைப்பு.

Visitor என்னும் சொல்லுக்குரிய மொழிபெயர்ப்பை முதலில் பார்த்தால் Visiting card என்பதற்குரிய மொழிபெயர்ப்பை அமைப்பது எளிதாக இருக்கும். இதற்காக, முதற்கண், நாம் பல இடங்களையும் Visit செய்தாகவேண்டும்போலல்லவா தோன்றுகிறது! Visit = வருகை. இது, சில சமயங்களில், பயணமாக மாறிவிடுகின்றது. எடுத்துக்காட்டாக, State Visit என்று சொல்லும்போது "அரசுமுறைப் பயணம்" என்று மாற்றம் பெற்றுவிடுகின்றது. Visitor என்பவரைப் "பார்வையாளர்" "வருகை தருபவர்" "வருகையாளர்" அல்லது "வருகையர்" என்று கொள்ளலாம். "காண வருபவர்" என்றும் சொல்லலாம்.

பெரியவர்களைப் பார்ப்பதற்காகப் பெருவிருப்புடன் செல்கின்றோம். ஆனால் பெரிய தலைப்பாகைத் தம்பிரான்கள் தடுத்து நிறுத்திவிடுகின்றார்கள்! தடையை உடைப்பதற்காக நம்முடைய Visiting card ஐ நீட்டுகின்றோம்! உள்ளே இருக்கும் அதிகாரி, அதைக் கண்ணுறும்போது சில சமயங்களில் சீறிவிழுவார்! சில சமயங்களில் வாரி அணைத்துக்கொள்வார்! அவ்வப்போது அமைகின்ற சூழ்நிலையைப் பொறுத்ததாகும் இந்தச் செய்தி. பெரும்பாலும், பெரிய அதிகாரிகளாக இருப்பவர்கள், ஓய்வு பெற்ற அதிகாரிகளைப் பார்க்க விரும்புவதில்லை. எனினும் ஓய்வுபெற்றவர்களை மதிநுட்பம் உடையவர்கள் என்றுதான் சொல்லவேண்டும்! ஏனென்றால், பெயரையும் பழைய பதவி

யையும் பெரிய எழுத்துக்களில் அச்சிடச் செய்திருப்பார்கள். ஆனல் அதே சமயத்தில் "ஓய்வு" என்னும் சொல் கண்ணுக்குத் தெரியாமல் ஒட்டிக்கொண்டிருக்கும்! "ஓய்வு" என்னும் அந்தச் சிறிய சொல்லைக் கவனிக்காத அதிகாரியோ அலறிப்புடைத்து அருகே அழைப்பார்! ஆனல் ஆளை நேரில் பார்த்தவுடனே நெஞ்சம் தளர்வார்!

ஒரு நாள் புதியவர் ஒருவர் எங்கள் அலுவலகத்திற்கு வந்தார். நகைச்சுவையாகப் பேசும் இயல்புடையவர் அவர் என்று பின்னர்தான் தெரிந்துகொண்டோம். புன்னகை பூத்த முகத்துடன் "நான் ஒரு Collector" என்று தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டார். "மாவட்ட ஆட்சியாளராக" அவர் இருப்பாரோ என்று எண்ணுவதற்கு அவருடைய முகத்தில் மிடுக்கான பார்வை எதுவும் தெரியவில்லை! ஒரு வேளை Bill Collector ஆக இருப்பாரோ? "பட்டியல் பணம் தண்டுபவராக" இருப்பின், கிழிந்த, அழுக்கடைந்த கெட்டிச் சட்டையைக் காணேமே என்று திகைத்தோம். கடைசியில் அவரே ஒரு விளக்கம் தந்தார். I am a Collector of Visiting Cards என்று கூறிமுடித்தார்! Visiting-cards தருகின்ற கவர்ச்சிக்கு இதைவிட வேறு சான்று வேண்டுமோ?

Visiting cardsகளை வகைவகையாகப் பல்வேறு வண்ணங்களில், எழில் சொட்டும் முறையில் அச்சிட்டுத்தரும் அச்சகங்கள் நிறைய இருக்கின்றன. Engaged in Visiting Card Industry என்று ஓர் அச்சகத்தார் தங்களை விளம்பரம் செய்துகொண்டுள்ளார்கள். Visiting card அச்சிடுதல் ஒருபெரிய தொழிலாக மாறிவருகின்றது. வெறுங்கையுடன் நிற்பதைவிட Visiting-card உடன் நிற்பது ஒளிவிளக்கைக் கையிலேந்தி நிற்பது போலல்லவா உள்ளது! ஆளைவிட அதிகமான மதிப்பு Visiting-cardற்கு ஏற்பட்டிருப்பதைக் காண்கின்றோம்! இது திறக்கமுடியாத கதவுகளைத் திறக்கச்செய்யும் பேராற்றலைப் பெற்றுத் திகழ்கின்றது!

Card என்னும் சொல்லை "அட்டை" என்று மொழிபெயர்க்கின்றோம். Post Card என்னும் பெயர் "அஞ்சல் அட்டை" என்று அழகாகப் பயின்று வருகின்றது. Ration Card என்பது "பங்கீட்டு அட்டை" என்றாகியுள்ளது. Visiting card என்று சொல்லும்போதும் Card என்னும் சொல்லை "அட்டை" என்று அமைக்கலாமா என்று ஆராய்த்து பார்த்தால், இந்த இடத்தில் "அட்டை" என்னும் சொல் அத்துணை அழகாகப் பொருந்தவில்லை என்பதே பொதுவான கருத்தாகும். "அட்டை" என்று

சொன்னவுடனேயே, சிலர், குருதி உறிஞ்சும் Leech என்னும் உயிரினத்தை எண்ணிக்கொள்கின்றார்கள் !

"காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம்"

என்கிறார் வான்புகழ் வள்ளுவர். எல்லாருமே காட்சிக்கு எளியராக இருந்துவிட்டால், Visiting card ற்குத் தேவையே ஏற்படாது. ஆனால் நாட்டு நடப்பு வேறுவகையாக அல்லவோ மிளிர்கின்றது! Visiting card என்பதற்கு "வருகையாளர் முகவரிச் சீட்டு" என்பதுதான் அகராதிப் பொருளாகும்.

Visitor காணவருகின்றார். அவர் எதிர்பார்ப்பது காட்சி. "காண்பவர் சீட்டு" "வருகையர் சீட்டு" என்றெல்லாம் சொல்லிப்பார்த்தால் எதுவுமே பொருந்தவில்லை. "காண்புச் சீட்டு" என்று சொல்லிப் பார்ப்போம். கற்கண்டுபோல இனிக்கும் என்றே கருதுகின்றேன். Visiting card = காண்புச் சீட்டு.

———

## பேராசிரியர் கா. சு. பிள்ளை 94-வது பிறந்தநாள் விழா

குழித்தலை, தமிழ் 'கா. சு.' நினைவு இலக்கியக் குழுவின் சார்பில் 15—11—81 அன்று குழித்தலை காவிரி நகர் அறிஞர் அண்ணா திருமண மண்டபத்தில் பல்கலைப் புலவர் பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்களின் 94-வது பிறந்தநாள் விழா மிகச் சீரும் சிறப்புமாக நடைபெற்றது.

திரு. மீ. சு. இளமுருகு பொற்செல்வி அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தி ஆண்டறிக்கையினைப் படித்தனர். விழாவில் வழக்கம்போல் கவியரங்கம், சிந்தனை அரங்கம், கருத்தரங்கம், பாராட்டுப் பட்டயம் வழங்குதல், இளமுருகு பொற்செல்வி அறக்கட்டளை கல்விப் பரிசு வழங்குதல் ஆகிய நிகழ்ச்சிகள் நடைபெற்றன. "பாரதியார் நோக்கில் சமுதாயம்" என்ற தலைப்பில் கவிஞர்கள் திருச்சி பரதன், து. வெள்ளமுத்து, இரா. கணேசன், மணிமாறன், சரசுவதி கதிர்வேல், செங்கைப் பொதுவன் ஆகியோர் கவிதைகள் நிகழ்த்தினர்.

தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தலைமையில் நடைபெற்ற கருத்தரங்கில் பாரதிதாசனார் மகன் மன்னர் மன்னன், கருவை பழனிச்சாமி, சோலை இருசன் ஆகியோர் பங்கு கொண்டனர். திருச்சி வானொலி நிலைய இயக்குநர் திரு. எம். சிவப்பிரகாசம் தலைமையில், இளமுருகு பொற்செல்வி அறக்கட்டளை கல்விப் பரிசினை மாணவிகள் டி. மீரா, எம். எஸ். மங்களம், மாணவர்கள் கிருட்டிணன், சாமிநாதன் ஆகியோர் பெற்றனர். தவத்திரு சாந்தலிங்க அடிகளார் திருமதி அம்புசம்மாளைப் பாராட்டிப் பட்டயம் வழங்கினர்.

தவத்திரு குன்றக்குடி அடிகளார் தலைமையில் சிந்தனையரங்கு நடைபெற்றது. 'வாழ்வாங்கு வாழும் நெறி' என்னும் பொருள்பற்றி அறிஞர் பலர் உரையாற்றினர். திரு. சு. நடராசன் நன்றி நவில விழா இனிது நிறைவுற்றது.

# முத்தமிழ்ச் சேத்திர மதுர பாற்கரதாசர்

[கழக இலக்கியச் செம்மல், புலவர் இரா. இளங்குமரன்]

நாடகத்துறைக்கு நலஞ்செய்த பெருமக்களுள் பாற்கரதாசர் (பாஸ்கரதாஸ்) குறிப்பிடத்தக்கவர். பம்மல் சம்பந்த முதலியார், சங்கரதாச சுவாமிகள் ஆகியவர்கள் வரிசையில் வந்த பெருமகன் பாற்கரதாசர்.



தேசியகவி சுப்பிரமணிய பாரதியாரின் நாட்டுப் பாடல்கள் மேடையில் முழங்குவதற்கு முன்னர், முழக்கம் பெற்றவை பாற்கரர் பாடல்கள்! விடுதலைப் போருக்கு வித்தாகி உணர்ச்சியும் கிளர்ச்சியும் மூட்டியவை பாற்கரர் பாடல்கள். பாற்கரர் பாடலை நடிகர் விசுவநாத தாசு பாடிக்கேட்டவர்கள், துடித்து எழுந்தனர். அப்பாடல்களைப் பாடுதற்கும் அயலரசு தடை விதித்திருந்தது!

பாற்கரர் எழுதிய நாடகங்கள் அறுபதிற்கும் மேற்பட்டன. அவர் பாடிய நாட்டுப்பாடல்களும் பத்திப்பாடல்களும் நாடகப் பாடல்களுமாக ஐந்நூறு பாடல்கள்வரை இப்பொழுது தொகுக்கப் பெற்றுள்ளன.

பாற்கரர் பாடல்கள் இசைத் தட்டில் வெளிப்பட்டன; திரைப் படங்களில் திகழ்ந்தன; நூல்களாகவும் வெளிவந்தன; இவற்றில் இடம் பெறுமல் வாய்மொழிப்பாடல்களாக இன்று பாடப் பெறுவனவும் உள.

பாற்கரரின் பிள்ளைப் பெயர் வெள்ளைச்சாமி. வள்ளல் பாண்டித்துரை நான்காம் தமிழ்ச் சங்கம் மதுரையில் கண்டகாலையில் அவர்க்கு அருந்துணையாக இருந்த வேந்தர் பாற்கர சேதுபதி. அவர்தம் ஆர்வத்தொண்டு வெள்ளையின் உள்ளத்தில் ஊன்றியது. தம் இல்லத்தைத் 'தமிழகம்' ஆக்கினுர். தம்மைப் பாற்கர சேதுபதி உரிமைப் பெயர்க்கு உரித்தாக்கினுர். முத்தமிழும் வளர்த்த இனிய மதுரை மாநகரை வாழ்விடமாகக் கொண்டார். அதனல் முத்தமிழ்ச் சேத்திர மதுர பாற்கரதாசர் ஆனுர்.

"ஒளிதரும் பகலவன் ஒளிந்திருப்பானே
உலகம் இருட்டிலே வருந்திடலாமோ"

என்பது பாற்கரர் வாக்கு. பாற்கரன் என்பது கதிரவன்தானே!

"பாஸ்கரன் தென்வடலாய் உதித்தாலும்
பாங்கி உன்காதல் நீங்கிடேன்"

என்னும் மொழிக்குச் சான்ருய் மொழிக் காதலில் தலைநின்ருர் பாற்கரர்.

பாற்கரர் பலதுறைப் பேரறிஞர்; நாடகப் புனைகதைப் படைப்பாளர் அவர்; உரை வரைந்த உறவோர் அவர்; பாடல் இயற்றிய பாவலர் அவர்; நாடகம் இயக்கிய இயக்குநர் அவர்; நாடகம் பயிற்றுவித்த ஆசிரியர் அவர்; நாடகம் பயிற்றுவித்த ஆசிரியர்க்கும் ஆசிரியராய் பேராசிரியராய் விளங்கியவரும் அவர்.

நாடகம் நம் மரபுக்கலை என்பதை உணர்ந்து போற்றியவர் பாற்கரர்; தமிழர் நாடக நோக்கினை நன்கு உணர்ந்தவரும் அவர். அதனால்,

"காரியத்திற் கன்றோ ஆரியர் நடிக்கின்ருர்;
கலை நலமாக எங்கே முயன்ருர்"

என்று வினவினர்.

பாற்கரர் பாட்டு எங்கும் கேட்டது! எவரும் பாடினர். "தேடி வந்தேனே வள்ளிமானே" என்னும் பாடலைப் பாடாதவர் அந் நாளில் உண்டோ? கேளாதவர் உண்டோ? பாற்கரர் பாட்டு எளிமையில் அருமை வாய்ந்தது.

"இராட்டை சுற்றுவீர்-சுய
காட்டைப் பற்றுவீர்."

எத்துணைச் சொற் சுருக்கம்! எத்துணைப் பொருட்பெருக்கம்!

"எல்லாம் தெரிந்த இந்து தேசந்தான்-ஆனல்
இப்போது நம் நிலைமை மோசந்தான்."

நாட்டு நிலைமையை இதற்குமேல் எப்படிப் படம் பிடித்துக் காட்ட முடியும்?

முத்து (முத்துசாமித் தேவர்) தந்த முத்தாக 1892இல் பாற்கரப் பேரொளி பிறந்தது. 1952 வரை ஒளிசெய்தது! இவ்வறுபது ஆண்டு வாழ்வில், நாற்பத்தைந்தாண்டு நாட்டுத்

தொண்டுக்குப் பயன்படுத்திய நல்வாழ்வு அது. அவ் வாழ்வை நிலைபெறுத்த நாடு முனைந்திருக்கவேண்டும், நாட்டுத்தலைவர்கள் முயன்றிருக்க வேண்டும்! ஆனால் நாடு மறக்கத் துணிந்த பாற்கரரை 'நான் மறவேன்' எனத் தொண்டாற்றுகிறார் பாற்கரர் மருகர் திரு. கருப்பையா. அவர் பாராட்டுக்கு உரியவர்; நாட்டவர் நன்றிக்கும் உரியவர். பாற்கரதாசரைப்பற்றி ஒரு 'கலைக் களஞ்சியம்' வெளியிடும் அளவுக்குத் தொகுத்து வைத்துள்ளார் அவர்! மதுரையில் பாற்கர தாசர் நகரையே உருவாக்கப் பாடு பட்ட அவர்க்குத், தொகுப்பு அரியது அன்றே!

———

## உழவுதொழிலும் உயிர் ஆக்கமும்

தொழில்களில் மேன்மையானது உழவுத்தொழில். நாகரிக நன்மக்களான வேளாளர்கள் ஓர் ஆண்டு முழுமையும் வெளியே போய்க்கொண்டு இருந்து இனிய பசும் பயிர் விளைத்துப் பாதுகாத்துக் கதிர் வரச்செய்து அறுத்துப் போரிட்டுக் கடாவிட்டுத் தூற்றுக்கழிக்கவேண்டுவன வெல்லாம் கழித்து முடிவாக அவற்றில் இருந்து கிடைத்த நல்ல தானிய மணிகளை அளந்து வீட்டுக்கு ஏற்றுகிறார்கள். அங்ஙனமே மக்கள் தமக்குப் புறமாயுள்ள உடம்பும் ஏனை எல்லா உலகப் பொருள்களும் கொண்டு, கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றுச் சுவைக்க வேண்டுவனவெல்லாம் சுவைத்துக் கழிக்கவேண்டுவன வெல்லாம் கழித்து அவற்றி லிருந்து கிடைத்த அரும் பெறல் மணிகளான அறிவு, நட்பு, அன்பு, அருள், இரக்கம் என்னும் தெய்வ இயல்புகளைப் பிழிவாய் இறுத்து உயிர்க்கு ஏற்ற கடமைப்பட்டிருக் கிறார்கள்.

—தவத்திரு அழகரடிகள்.

# அவ்வே மாத்திரை

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

குறில் நெடில் மெய் ஆகிய எழுத்துகளைப் பலுக்குதற்காகும் காலத்தை அளத்தற்குக் கண்ணிமைக்கும் அல்லது கைநொடிக்கும் கால அளவு அடிப்படை அலகாகக் கொள்ளப்பட்டு மாத்திரை யென்னும் பெயரால் அழைக்கப்பட்டு வருகிறது.

> "கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை
> நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட வாறே"
>
> (தொல். எழுத். எ.)

என்று தொல்காப்பியரும் மாத்திரையைக் குறிப்பிடுகிறார். பருப்பொருள்களைப் பருப்பொருள்களால் அளக்கலாம். காலம் என்னும் நுண்பொருளான கருத்துப் பொருளைக் கண்ணிமை முதலா ஊழிகாறும் பழந்தமிழ்ச் சான்றோர் அளக்க முற்பட்டனர். காலத்தை, குறிப்பிட்ட காலக் கழிவுக்குள்ளான பொருளொடு அல்லது நிகழ்ச்சியொடு அல்லது ஓசையொடு சார்த்தியல்லது அளக்கவியலாது. அதனால், நிறுத்தளத்தல், பெய்தளத்தல், சார்த்தியளத்தல், நீட்டியளத்தல், தெறித்தளத்தல், தேங்கமுகந் தளத்தல், எண்ணியளத்தல் என்னும் எழுவகை யளவுகளுள் காலத்தையளத்தலைச் சார்த்தியளத்தல் என்றார் நச்சினார்க்கினியர்.

கண்ணிமைக்கும் நேரமும், கைநொடிக்கும் நேரமும் சமமாயின் மாத்திரையளவுக்கு ஏதேனும் ஒன்றைச் சான்று காட்டிற் போதும். இரண்டையும் சுட்டி, அவ்வே மாத்திரை எனப் பன்மை வாய்பாட்டாற் கூறுதல் வெற்றன தொடுத்தலன்றோ என வினாக்கணை தொடுப்பாரும் உளர். கண்ணிமை, நொடி என்னும் பலபொருளொரு சொற்கள் ஈண்டுத் தொழின்மேலும் ஓசை மேலும் முறையே நின்றன என்று நச்சினார்க்கினியர் இதற்கு விளக்கம் தருகின்றார். கண்ணிமைப்பது தொழிலாயின் கை நொடிப்பதும் தொழிலன்றோ? கைநொடித்தலால் விளையும் ஓசை மட்டும் ஒரு மாத்திரையாகி விடுமோ?

> "உன்னல் காலே ஊன்றல் அரையே
> முறுக்கல் முக்கால் விடுத்தல் ஒன்றே"

எனக் கைநொடிக்கும் மாத்திரையளவுக்கு விளக்கம் தரும்போது, உன்னும்போதும் ஊன்றும்போதும் கழிந்த அரை மாத்திரை போக எஞ்சிய அரைமாத்திரைக் காலமன்றோ வெறும் கை நொடி யோசைக்குரிய காலமாகும். கடிகாரத்தில் ஒரு நொடியைக் காட்டும் ஓசையே ஒரு நொடியாகாது. ஒரு நொடி ஓசைக்கும் அடுத்த நொடி ஓசைக்கும் இடைப்பட்ட காலமும் ஒரு நொடியோசையும்

சேர்ந்துதான் ஒரு நொடி எனப்படும். பாடும்போது ஓசையைச் சார்த்தியளக்கும் இசைவாணர் மாத்திரைகளைப் பெருவிரலால் ஏனை நான்கு விரல் நுனிகளொடு தனித்தனி ஒற்றியும், நான்கு முறை கைமறித்துத் தொடைமேல் தட்டியும் மாத்திரையளப்பதை எவருங் கண்டிருத்தல் கூடும். எனவே, ஓசையைச் சார்த்தியளக்க ஓசையளவை உள்ளடக்கிய தொழிலே சாலும். ஒரு மாத்திரைக் காலத்திற்குரிய கால அளவை நச்சினார்க்கினியர் பின்வருமாறு விளக்குகிறார் :

இயற்கை மகன் (உடல்நலத்தோடிருந்து இயல்பால் இமைப்பவன்) தன் குறிப்பினன்றி இரண்டிமையும் ஒருகாற் கூடி நீங்கின காலக்கழிவும் 'அ' எனப் பிறந்த ஓசையது தோற்றக் கேட்டுக் காலக்கழிவும் ஒக்கும். இக் கண்ணிமையினது பாகம் (பாதி) மெய்க்குஞ் சார்பிற்றோற்றத்திற்கும் (சார்பெழுத்து), இதன் பாகம் (பாதி-$\frac{1}{4}$) மகரக் குறுக்கத்திற்கும் கொள்க. நொடித்தலிற் பிறந்த ஓசையது தோற்றக்கேட்டுக் காலக்கழிவும் 'அ' எனப் பிறந்த ஓசையது தோற்றக்கேட்டுக் காலக்கழிவும் ஒக்கும்.

இன்றைய அறிவியலார் கண்ணிமைக்கும் காலமும் கை நொடிக்கும் நேரமும் சமம் என்று ஒப்புவதில்லை. ஒரு நொடியில் (second) எட்டில் ஒரு பங்கே கண்ணிமைக்கும் நேரம் என்று அறிவியலறிஞர் கூறுகின்றனர். கண்ணிமைக்கும் நேரமும் கை நொடிக்கும் நேரமும் சமமா என்று நச்சினார்க்கினியர்க்கே ஐயந் தோன்றி அதிலிருந்து தம்மைத் தெளிவுபடுத்திக்கொள்ளும் வகையில், கண்ணிமைக்கும் நொடிக்கும் அளவு ஆராயின் வரம்பின்றி ஓடுமென்று கருதி "நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டவாறு" என்று முடிந்தது காட்டலென்னும் உத்தி கூறினார் என்றும், 'எழுத்திற்கே அளவு கூறி மாத்திரைக்கு அளவு கூறிற்றில' என்றும் உரைவிளக்கம் தருகிறார்.

மாத்திரைக்கு அளவு கூறுவது நோக்கமின்றெனின் 'கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை' என்று தொல்காப்பியர் ஏன் கூறவேண்டும்? குற்றெழுத்தைந்தும் ஒரு மாத்திரை என்று கூறாமல் குற்றெழுத்தைந்தும் ஓரளபிசைக்கும் என்கிறார். நெட்டெழுத்தேழும் ஈரளபிசைக்கும் என்கிறார். மாத்திரை என்னும் சொல்லைப் பயன்படுத்தவேண்டிய இடத்தில் அளபு என்னுஞ்சொல்லைத் தொல்காப்பியர் பயன்படுத்துவதை நோக்கும் போது மாத்திரைக்கு அளவு கூறாமல் எழுத்துக்கே அளவு கூறுகிறார் என்று தோன்றுகிறது. தொல்காப்பியம் இசைநூலன்மையான் மாத்திரைக்குரிய அளவு விதந்து வகைப்படுத்திக் கூற வேண்டியதில்லை. எனினும், செய்யுளியல் இசைத்தமிழாகும்

பெற்றியுடைமையான் மாத்திரையிலக்கணம் கூறவேண்டிய தாயிற்று.

பண்டையிலக்கண நூலாருள் ஒரு சாரார், இரண்டு மெய்களை ஒலிக்கும் காலம் மாத்திரை எனக் கொண்டனர். மற்றுஞ் சிலர், சீரிப்பிள்ளை எழுப்பும் ஓசை அரை மாத்திரையெனவும், குருவியின் ஓசை ஒரு மாத்திரையெனவும், காக்கையின் ஓசை இரு மாத்திரை யெனவும், மயிலின் அகவலோசை மூன்று மாத்திரை எனவும் கொண்டனர். பண்டை இலக்கண நூலார் 'குகூகோஒ' என்று சேவல் கூவும் ஓசையின் மூவெழுத்துகளை முறையே ஒரு மாத் திரை, இரு மாத்திரை, மூன்று மாத்திரை கால அளவுகளுக்குச் சார்த்தியுரைத்தனர். வடமொழியாளர், கண்ணிமை திறந்து மூடுங் கால அளவே மாத்திரை ("நிமேஷோன்மேஷ காலேன சமம் மாத்ராதுலாஸ்ம்ருதா") என்றனர். வடமொழியாளர் கருத்தையே ஏற்று நச்சினார்க்கினியரும், 'நொடியிற் கண்ணிமை சிறப் புடைத்து, உள்ளத்தான் நினைத்து நிகழாமையின்' என்று கூறு கிறார். இசை நூலார் பழந்தமிழிசையில் நொடியில் எட்டிலொரு பங்கு ($\frac{1}{8}$ நொடி) நுணுகியொலிக்கும் ஒலி நுட்பம் உண்டென்று கூறுகின்றனர். இன்றைய அறிவியலார் கண்ணிமைக்கும் காலம் அரைக்கால் மாத்திரையே (நொடி) என்று தெளிவுபடுத்தியிருப் பது இசை நூலாரின் நுணுகிய கால அளவை ஒத்திருப்பதைக் காணலாம்.

மிக நுண்ணியவற்றை அளக்கவோ நிறுக்கவோ சிறிய சார் பளவுகள் பயன்படுத்தப்படுமாறுபோல மிகக்குறைந்த ஓசைக் குரிய காலத்தையளக்க நுட்பமான கண்ணிமைக்கும் வினை சார் பளவாகக் கொள்ளப்படுவதும், ஓசை தெளிவாக விளங்கும் ஒரு மாத்திரை முதலாக அதற்கு மேற்பட்ட காலத்தையளக்க எளிதா கவும் தெளிவினையாகவும் புலப்படும் கை நொடிக்கும் வினை, சார் பளவாகக் கொள்ளப்படுவதும் மிகவும் ஏற்புடைய. அதனாற்றான் மாத்திரையளவுக்குக் கண்ணிமைத்தல் கை நொடித்தல் என்னும் இரண்டையுஞ் சார்பளவுகளாகக் காட்டி, அவ்வே எனப் பன்மைச் சுட்டாற் சுட்டி, அவ்வே மாத்திரை என விளக்கினார் போலும்.

எனவே ஒரு மாத்திரையினும் குறைந்து ($\frac{1}{4}$ மாத்திரையாக $\frac{1}{8}$ மாத்திரையாக) நுணுகி ஒலிக்கும் ஓசையைச் சார்த்தியளக்கக் கண்ணிமைக்கும் காலமும், ஒரு மாத்திரை முதலா அதற்கு மேற் பட்ட காலத்தையளக்க, கை நொடிக்கும் காலமும் எடுத்துக் காட் டாகக் கொள்ளப்பட்டனவா என்று கருதத் தோன்றுகிறது. இதனை அறிஞர்பெருமக்கள் மேலும் ஆராய்ந்து தெளிவு படுத்துதல் இன்றியமையாதது.

———

## தமிழ்ப் பல்கலைக்கழகத்திற்கு முன்னோடி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகமே!

[பன்மொழிப் புலவர் மு. சதாசிவம், எம்.ஏ., எம்.லிட்., டிப். லிங்.,]

கடந்த அறுபதாண்டுகளுக்கு முன்பு சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தமிழையும் சைவத்தையும் வளர்ப்பதற்கென்றே நிறுவப்பட்டதெனினும் காலப்போக்கில் சைவசமய நூல்களைப் போலவே பிற சமய நூல்களையும் வெளியிட்டதுடன் தமிழுக்குத் 'துறைதோறும் துறைதோறும் துடித்தெழுந்து' பணியாற்றி வந்துள்ளது. வடமொழி யுணர்ச்சியும் ஆங்கிலப்பற்றும் மிக்கோங்கியிருந்த காலத்தில் தோன்றிய இந் நூற்பதிப்புக் கழகம் நல்ல தமிழ் வளர்க்கும் பல்கலைக் கழகமாகவே வளரத் தொடங்கியது. இக் காலத்தில் பல அரசியல் கட்சிகளும், வாணிகர் குழுமங்களும், பல்கலைக் கழகமும் 'கழகம்' என்ற நல்ல பெயரை அமைத்துக்கொண்டு மகிழ்கின்றனவெனின், அச் சொல்லிற்கு ஏற்றமும் பெருமையும் பிறங்கச் செய்தது இந் நூற்பதிப்புக் கழகமே. எங்கெங்கு நோக்கினும் 'சங்கங்'களே மலிந்திருந்த அக் காலத்தில் தம் தொலைநோக்கறிவினால் இக் கழகத்தைத் தோற்றுவித்தவர்கள் நல்ல தமிழ்ச்சொல்லைப் பயன் படுத்திப் பெயரமைத்து இது பிற்காலத்தில் அரசின் உதவி யில்லாமல் வளர்ந்தோங்கும் ஒப்பற்ற தமிழ்ப் பல்கலைக் கழக மாகவே மலருமாறு வழிவகுத்துச் சென்றனர். கடந்த காலக் கழக வரலாற்றைச் சூழ்நிலைகளின் பின்னணியில் நோக்கும்போது வெறும் நூல்களைப் பதிப்பிக்கும் கழகமாக மட்டும் இல்லாமல் எங்கெங்கே அறிஞர்கள் இருக்கின்றார்கள் என்று தேன் நுகர் வண்டுபோலத் தேடிப் பிடித்து அவர்களிடம் அமைந்திருக்கும் ஆற்றல்கள் இவையிவை யென அறிந்து அவற்றை வெளிப்படச் செய்து தமிழகம் பயனுற வாழ்வதற்காக அவர்கள் வழியாக நல்ல பல நூல்களை உருவாக்கியும், புத்தம் புதிய கலைகள் மேற்கே வளர்ந்தாலும், தமிழில் அவையனைத்தும் அறிவுநூல்களாக மலர வேண்டுமென்ற அயரா முயற்சியினால் புதிய அறிவுத் துறைகள், கலைத் துறைகள், அறிவியல் துறைகள் ஆகியவற்றில் பலவகையான நூல்களை வெளியிடும் செயற்கருஞ் செயலை மேற் கொண்டும், பலவகையான அறிவுநூல்களை ஆங்கிலத்திலிருந்து அழகுத் தமிழில் மொழியாக்கஞ் செய்து வெளியிட்டும், அஞ்சல் வழிக் கல்விப் பாடங்களை நடாத்தும் பல்கலைக் கழகத்தினர் மாணவர்களுக்கு அவ்வப்போது கருத்தரங்கு வகுப்புகள் (Contact Classes) வைத்து நடத்துவதுபோலப் பன்னெடுங் காலமாகவே

கழகம் பொதுமக்களோடு நெருங்கிய தொடர்புகொண்டு அவர்கள் கழக நூல்களின் பயன்பாட்டினைப் பெறவேண்டுமென்ற நோக்கத்தில் பல்வகையான சொற்பொழிவு மாநாடுகள், இலக்கிய மாநாடுகள், வெளியீட்டு விழாக்கள், சிறப்பு விழாக்கள் போன்றவற்றை அவ்வப்போது நடாத்தியும், பொதுமக்களின் அறிவு வளர்ச்சிக்காகச் சென்னையிலும் திருநெல்வேலியிலும் முறையே மறைமலையடிகள் நூலகம், சிவஞான முனிவர் நூலகம் ஆகியவற்றை அமைத்தும், பல்லாவரத்தில் மறைமலையடிகள் கலை மன்றம் அமைத்தும், கழகத்தின் துணை நிறுவனங்களாக (affiliated institutions)த் திருநெல்வேலியில் தென்னிந்திய தமிழ்ச் சங்கமும், சென்னையில் சைவசித்தாந்த சங்கமும், திருநெல்வேலியில் திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரியும் நிறுவியும்; சென்னை, மதுரை, கோவை, கும்பகோணம், திருச்சி ஆகிய இடங்களில் கிளைக் கழகங்கள் அமைத்தும், மாநாடுகளில் அறிஞர் பெருமக்களைப் பாராட்டிச் சிறப்புச் செய்தும், பரிசுகள் பெறச் செய்தும் கடந்த அறுபதாண்டுக் காலத்தில் வாழ்ந்த, வாழ்ந்து கொண்டிருக்கிற தமிழ் அறிஞர்பெருமக்கள் அனைவரிடமும் தொடர்பு கொண்டு அவர்களுடைய அறிவுத் திறன்களையெல்லாம் நூல்வடிவாக்கி உலகிற்கு வழங்கிவரும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் இப்போது அண்மையில் பார்புகழும் தஞ்சை மாநகரில் சீர்மிகுந்த 'தமிழ்ப் பல்கலைக் கழகம்' தோன்றுவதற்கு எல்லாவகையிலும் முன்னோடியாக அமைந்து, இப் புதிய பல்கலைக் கழகம் செயல்படும் முறைகளுக்கெல்லாம் முன்னதாகவே நெறி முறைகளை வழிவகுத்துத் தந்து, ஊக்குணர்ச்சியும் (inspiration) தந்து, ஆழ்ந்ததோர் அடித்தளத்தை அமைத்துத் தந்து, புதிய தமிழ்ப் பல்கலைக் கழகம் வானுற ஓங்கி வளர்வதற்கு வேண்டிய எல்லா வகையான முன்னணிகளையும் இயற்றித் தந்து, கடந்த காலத்தில் அவ்வப்போது ஆறலை கள்வர்கள் போலத் தோன்றிய தமிழ்ப் பகைவர்களையெல்லாம் அரும்பாடுபட்டு நசுக்கி ஒழித்து இனித் தமிழுக்குப் பகைவர்கள் ஒழிந்தார் என்ற அமைதியான சூழ்நிலையில் மலர்ந்த புதிய தமிழ்ப் பல்கலைக்கழகத்தைச் சேய் கண்டு உவக்கும் ஈன்ற தாய் போன்று, நெஞ்சமினிக்க வரவேற்றுப் போற்றும் இச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தொடர்ந்து அரசுச் சார்பற்ற, தன்னியக்க, உரிமைமிக்க தமிழ்ப்பெரும் பல்கலைக்கழகமாகத் தமிழுக்கும், தமிழ்ப்பெருமக்களுக்கும் ஒல்லாங்கு பெருந்தொண்டு இயற்றிக்கொண்டே யியங்கும்.

இக் கழகம் தோன்றிய நாள் தொடங்கித் தம் அண்ணருக்குத் துணையாகவிருந்து அவரது மறைவிற்குப்பின் இக் கழகத்தின்

தனிப்பெருந் துணைவேந்தராக இருந்து உலகம் வியக்கும் வண்ணம் ஒரு நூற்பதிப்புக் கழகத்தை ஒப்பற்ற பல்கலைக்கழக நிலைக்கு உயர்த்திய செயற்கருஞ் செயல் செய்த தீரரை, தமக்கெனப் பொருளும் போகமும் புகழும் வேண்டாது, 'எல்லாம் கழகத் திற்கே' என்று இரவு பகலாக அறுபதாண்டுகளாக உழைத்து வரும் உத்தமரை, நம் செந்தமிழ்க் காவலரைத், தாமரைச் செல் வரை, எண்பத்து ஐந்து வயதிலும் தமிழுக்குத் தளராது தொண்டு செய்துவரும் தன்னேரில்லாத் தமிழ்க் கிழவரைப் புதிய தமிழ்ப் பல்கலைக்கழகம் நன்றியுணர்வுடன் போற்றிச் சிறப்புப் பட்டம் தந்து பாராட்டிப் பெருமை பெற்றுக்கொள்ள வேண்டு மென்பது என்னைப் போன்று இந் நூற்பதிப்புக் கழகமென்னும் பல்கலைக்கழகத்தில் பயின்று பயன்பெற்ற எண்ணிலாத் தமிழன் பர்களின் இதயங்களில் ஊற்றெடுக்கும் ஆசையாகும்.

ஊர்தோறும் சென்று தம் செல்வாக்கைப் பயன்படுத்திக் கொண்டு பழந்தமிழ்ச் சுவடிகளைச் சேர்த்து ஒப்பிட்டுச் செம்மை யாகப் பதிப்பித்து மறைந்துபோகவிருந்த சில தமிழ்நூல்களை வெளிக் கொணர்ந்த தமிழ்த்தாத்தா டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்களை விரைந்து உணர்ந்து போற்றிய தமிழகம், இக் கழகக் காவலர் திரு. வ. சுப்பையாபிள்ளையவர்களின் இடைவிடாத தூண்டுதல் இல்லாமற் போயிருக்குமாயின் எழுதப்படாமலேயே மறைந்துபோகக்கூடிய நூற்றுக்கணக்கான நூல்களையெல்லாம் வெளிக் கொணர்ந்த அருமைப்பாடு ஐயரவர்களின் தொண்டிற்குச் சிறிதும் இளைத்ததன்று, பெரிதும் மேம்பட்டதே என்பதனை உணர்ந்து ஏனோ இன்னும் இவரைத் தமிழக அரசும், தமிழக மக்களும் தக்காங்கு போற்றவில்லை! சில பெருமக்களை அவர்கள் வாழுங் காலத்திலேயே போற்றி மகிழும் பாங்குதான் தமிழர்களுக்கு இன்னுங் கைவரப் பெருத கலையாயிற்றே! ஏறக்குறைய ஆயிர தெண்ணூறு நூல்களைத், தரங்குறையாத் தமிழ்ச்செல்வங்களை உருவாக்கி வெளியிட்ட தனியொருவரின் அரும்பெரு முயற்சியைத் தமிழகம் உணர்ந்து போற்றும் நாள் எந்நாளோ! ஒருவேளை முன்னாள் தமிழக முதல்வர் கலைஞர் டாக்டர் மு. கருணாநிதி அவர்கள் ஒருமுறை குறிப்பிட்டதுபோலச் சுப்பையா அவர்கள் சுப்பையராக இருந்திருந்தால் அவருடைய புகழ் உலகெங்கும் எளிதில் பரவியிருக்கும் போலும்!

இனி இக் கழகம் தமிழ்ப்பெரும் பல்கலைக் கழகமாக மலர்ந்து செயல்பட்ட வரலாறுகளை நோக்குவாம்.

(தொடரும்)

———

# தொல்காப்பியர் கூறிய வடசொல்

[மயிலம், ஆ. சிவலிங்கனுர்,

ஆய்வாளர்-உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-20.]

செய்யுள் ஈட்டுச் சொற்களாக இயற்சொல், திரிசொல், திசைச் சொல், வடசொல் என்ற நான்கு சொற்களையும் தொல் காப்பியர் முதலில் குறித்தார். (தொல். சொல் 297). பின்னர் அவற்றின் இலக்கணங்களைக் குறித்தார் (ஷை 398—401). அவற் றுள் வடசொல்லின் இலக்கணமாக,

> "வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
> எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே" (ஷை 400)

என்றார். இதில் வடசொல் என்பதற்கு உரையாசிரியர் நீங்கலாக மற்றை யுரையாசிரியர் யாவரும், வடமொழிச்சொல்—அஃதாவது சமக்கிருதச்சொல் என்றே பொருள் கொண்டு உரையெழுதினர். உரையாசிரியர் என்பவர் மட்டில் (இளம்பூரணரல்லர்) "வட சொல்லோடு ஒக்கும் தமிழ்ச்சொல் என்று எழுதினர்.* இதை மனத்திற்கொண்டு, திரு. பா. வே. மாணிக்க நாயக்கர் என்பவர், 'வடசொல் என்பது தமிழ்ச்சொல்லே' என்றும், வடக்கிருத்தல் என்பதில் 'வடக்கு' என்பதற்குத் 'துறவு' எனப் பொருள் கொள் ளக்கிடத்தலின் அதன் அடிப்படையில் வடசொல் என்பதற்குத் துறவினர்—தமிழ் நாட்டு அந்தணர் வழங்கும் தமிழ்ச்சொல் எனக் கொள்ளலாம் என்றும், ஆனாலும் தீர்க்கமாகச் சொல்வதற் கேற்ற சான்றுகள் இதுவரையிற் கிடைக்கவில்லை" என்றும் கூறி னார்கள். (ந. சி. கந்தையா பிள்ளை எழுதிய தமிழகம் என்னும் நூல். பக்கம் 151—152 பார்க்க)

வட சொல் என்பதுபற்றி இளம்பூரணர் கொள்கை தெளி வாக இல்லை என்றாலும் உரையாசிரியர் கொள்கையோடு ஒத்தே உள்ளது என்று கூறலாம். அவர்,

> "வட சொல்லாவன உலகம், குங்குமம் என்னும் தொடக்கத்தன. குங்குமம் என்றவிடத்து இரு சார்க்கும் (தமிழ், ஆரியம்) பொதுவெழுத்தினான் வருதல் உடைமை யும், ஆரியத்தானும், தமிழானும் ஒரு பொருட்கே பெயராகி வழங்கி வருதல் உடைமையும் அறிக"

என்றெழுதியதால் அறியலாம்.

---

* தொல். சொல். 400இல் சேனாவரையர் உரையாசிரியர் கூற் றாகக் கூறியுள்ளது இது.

உலகம், மணி, குங்குமம், வாரி, மானம், மீனம், வீரம், வேணு, காரணம், காரியம், நிமித்தம், இலக்கணம், இலக்கியம் முதலிய சொற்கள் தமிழிலும், ஆரியத்திலும் காணப்படுவன. இவ்விரு மொழிகளிலும் ஒவ்வொரு பொருளையே குறிப்பன. உலகம் என்பது தமிழிலும், ஆரியத்திலும் ஒரு பொருளையே குறிக்கும். இப்படித் திசைச்சொற்கள் அமையவில்லை. அந்தோ என்பது சிங்களச்சொல். அது சிங்களத்துக்கே யுரியது; தமிழுக்குரியது இல்லை. அது தமிழில் வந்து வழங்குகின்றது. அதனால் அது திசைச் சொல் எனப்பட்டது. உலகம் என்ற சொல் ஆரியத்துக்கே யுரியதன்று; தமிழுக்கும் உரியது. அதனால் அஃது இரு மொழிக்கும் உரிய பொதுச்சொல். எனவே உலகம் முதலிய சொற்கள் வட சொற்கள் எனத் தனிப்பெயர் கொடுக்கப்பட்டன.

செய்யுள் ஈட்டும்போது இயற்சொல், திரிசொல் ஆகிய தமிழ்ச்சொற்களையும், தமிழ்நிலத்தும் பிற நிலத்தும் உள்ளனவாய் இயற்சொல்லாகவும் திரிசொல்லாகவும் இல்லாதனவாய் வரும் திசைச்சொற்களையும் மேற்கொள்ளலாம் என்று கூறவந்த இலக்கண நூலார், உலகம், மணி போலும் சொற்களை மேற்கொள்ளலாமா வேண்டாமா என்ற ஐயத்துக்குட்பட்டார்கள். ஏன் எனின், அச் சொற்களைத் தமிழ்ச்சொற்களாகக் கொண்டு இயற்சொல்லில் அடக்குவதா அல்லது ஆரியச்சொற்களாகக் கொண்டு திசைச்சொல்லில் அடக்குவதா என்று ஐயம் ஏற்பட்டது. அதனால் அவற்றுக்கு 'வடசொல்' என்ற பெயர் கொடுத்துத் தனிச் சொற்களாக்கினர். பின்னர் அவற்றையும் — வடசொற்களையும் செய்யுள் ஈட்டச் சொற்களாக்கினர்.

இனி உலகம் முதலியன இருமொழிப் பொதுச்சொற்களாக அமைதற்குக் காரணம் என்ன எனக் காணுதல் வேண்டும். இரு மொழிகளில் சொற்களின் ஒப்புமை அரிதாகக் காணுமே தவிர மிகுதியும் காணப்படுவதில்லை. மிகுதியும் காணப்படுவது ஒரு குடும்ப மொழிகளில்தான் அமையும். ஆரியமும் தமிழும் ஒரு குடும்ப மொழிகள் அல்ல. அப்படியிருக்க ஆரியத்துக்கும் தமிழுக்கும் பொதுவான சொற்கள் தமிழில் பல காணப்படுகின்றன. அதனால் ஆரியச் சொற்கள் தமிழில் வந்தனவாகப் பல சொற்களை ஆரியமொழி வல்லுநர் — பற்றுடையவர் கூறிய கொடுமையும் ஏற்பட்டது.

ஒரு காலத்தில் இந்தியப் பெருநாடு முழுமையும் தமிழே வழங்கி வந்திருக்கின்றது. பின்னர் ஆரியர் வரவால் வடநாட்டு மொழிகள் பல உருவாயின. தமிழொடு கலந்த ஆரியத்தால் தெலுங்கு முதலிய திராவிடக்குழு மொழிகள் உருவாயின.

இந்தியப் பெருநாட்டிற்கு ஆரியர் குடியேறியபோது அவர் மொழி செம்மையுருது இருந்தது. தமிழரொடு கலந்து வாழ நேரிட்டபோது அவர் மொழி திருத்திக்கொள்ளப்பட்டது. 'சமக்கிருதம்' என்ற சொல்லுக்கு 'நன்ருகச் செய்யப்பட்டது' என்பது பொருள். எனவே, சமக்கிருதம் என்ற சொல் உருப் பெறுவதற்கு முன் சமக்கிருத மொழியானது (ஆரிய மொழி) நாடோடி வழக்காகவே இருந்திருக்கிறது. அது தமிழ்ச்சொற்கள் பலவற்றைத் தன்பால் ஏற்றுத் திருத்தம் அடைந்தது. அதனுல் தமிழ்ச்சொற்கள் பல ஆரியத்தில் ஏறின. நேராகவும் திரிந்தும் ஏறின. உலகம், மணி முதலியன நேராகச் சென்றன. ஆணை (ஆக்ஞை), மந்திரம் (மந்த்ரம்), உத்தி (யுக்தி) முதலியன திரிந்து சென்றன. திரிந்த சொற்கள் ஆரியத்துக்கே யுரியனபோல அமைந்துவிட்டன. என்ருலும் அவற்றின் வேர்ச்சொற்கள் தமிழ்ச் சொற்களே. திரியாது நேரே சென்ற சொற்களைப் பிற்காலத்தவர்கள் ஆரியத்துக்கே மதிப்புக் கொடுத்ததால் ஆரியச் சொற்களாகவே கொண்டு, அவை தமிழில் வந்து வழங்கின என்றே கூறுவாராயினர். இதற்குச் சான்ருகத் திரு. பி. டி. சீனிவாசய்யங்கார் அவர்கள் கூறியதைக் காணலாம்.

> "20,000 (இருபதாயிரம்) வருடங்களுக்குமுன் இந்தியாவில் வழங்கிய மொழிகள் தமிழ் சம்பந்தமானவையென்றும், கோதாவரிக்குக் கீழ்ப்புறத்து வழங்கும் மொழி பழந்தமிழ்ச் சம்பந்தமானது என்றும், தற்காலம் வட இந்தியாவில் வழங்கும் வடமொழி சம்பந்தமான மொழிகள் பழந்தமிழ் வழிவந்தனவும் மிகுதியும் சமஸ்கிருதப் போக்கைத் தழுவியனவும் ஆகிய மொழிகளே என்றும் திரு. பி. டி. சீநிவாசய்யங்கார் அவர்கள் கூறியதாகத் தமிழக வரலாறுடையார் கூறினர்."
> (தமிழகம் பக்கம் 60)

என்பதனுல் அறியலாம்*.

ஆரியம் பேச்சு வழக்கற்றுவிட்ட பின்னர் அதற்கு அவ்வப்போது இலக்கணம் எழுதுதல் நின்றது. அதனுல் பிறசொற் கலப்புப்பற்றி அந் நூல்களில் கூறப்படவில்லை. தமிழ் பேச்சு வழக்கு, நூல் வழக்கு ஆகிய இரு வழக்கும் உடையதாதலின், காலத்துக்குக் காலம் சொற்கள் புதியன புகுதல் உண்மையின், அவ்வப்போது இலக்கணம் எழுத நேர்கிறது. அவ்வகையில்

---

* யான் எழுதிய 'அகத்தியர்கள்' என்ற நூலில் இக்கருத்து உறுதி செய்யப்பட்டுள்ளது.

தொல்காப்பியர் வட சொற்களும் செய்யுள் ஈட்டச்சொற்களாகக் குறித்தார்.

"வட சொற்கிளவி......சொல்லா குமமே" (தொல். சொல். 400)

"சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்" (ஷை 401)

என்ற நூற்பாக்களைத் தமிழுக்குக் கூறவேண்டிய இன்றியமையாமை யேற்பட்டது. முறையாக வடமொழி இலக்கண நூலார் தமிழ்ச்சொற்கள் தமிழ்எழுத்தைவிட்டு ஆரிய எழுத்தொடு புணர்ந்து ஆரிய மொழியில் வரும் என்றும், தமிழ்ச்சொற்கள் சிதைவுற்ற நிலையிலும் ஆரியமொழியில் வரும் என்றும் இலக்கணம் அமைத்திருக்க வேண்டிய நிலை, பேச்சு வழக்கற்றமையின் நின்றது என்னலாம்.

எனவே திசைச் சொல்லில் அடக்கவேண்டிய வடசொல்லைத் தனித்துக் கூறியது, தமிழிலும் சமக்கிருதத்திலும் ஒரே பொருளை மாற்றம்இன்றித் தரும் பல சொற்கள் இருத்தலின்— அஃதாவது வடசொல்லோடு ஒக்கும் தமிழ்ச்சொற்கள் பல இருத்தலினால்தான் என்னலாம்.

இன்று வட சொற்களாகத் தமிழ்மொழியில் காணப்படுவனவற்றைத் திரட்டி இரு மொழியிலும் ஒரு பொருளையே தரும் பெருவழக்கான சொற்களை வடசொற்கள் என்றும், அரிய வழக்குள்ள சொற்களை — தமிழ் வேர்ச் சொற்கள் அமையாத சொற்களைத் திசைச் சொற்கள் என்றும் கூறிவிடலாம்.

அங்ஙனமாயின் வட மொழிச் சிறப்பெழுத்துகளால் ஆகும் சொற்கள் தமிழில் வழங்குவதுபற்றிய "சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்" (தொல். சொல். 401) என்னும் நூற்பா நின்று வற்றுமே என வினவலாம். அந் நூற்பா இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் ஆகிய நான்கற்கும் புறநடை நூற்பா என்பது புலவர் க. வா. சச்சிதானந்தம் அவர்களின் கருத்தைக் கொண்டு உணரலாம்*. இயற் சொல் முதலிய நான்கு சொற்களிலும் சிதைவுச்சொற்கள் (மரூஉ போன்றன) காணப்படுவனவும் செய்யுள் ஈட்டச் சொற்களில் சேர்க்கப்படும் என்பது அவர் கருத்து. இது மிகப் பொருந்துவதே.

———

* இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் 11 ஆம் கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி 2 பார்க்க.

# ஆனையூர் குடைவரைக்கோயில்

[தி. இராசமாணிக்கம், பி.ஏ., பி. காம்., விசாரத்,
கூட்டுறவுச் சங்கங்களின் இணைப்பதிவாளர்,
26, இராமகிருஷ்ண சாலை, சேலம்-7]

சங்கரன் கோயிலினின்றும் பெரியூர் செல்லும் வழியில் 6 கி. மீ. தொலைவில் ஆனையூர் என்ற சிற்றூர் உள்ளது. ஊரினை அடுத்து இயற்கையாக அமைந்துள்ள மலைச்சரிவில் மேற்கு நோக்கிக் குடைவரை ஒன்று உருவாக்கப்பட்டுள்ளது.

குடைவரைவின் முகப்பில் பருமனான இரு தூண்களும் இரு அரைத் தூண்களும் காணப்படுகின்றன. தூண்களும், அரைத் தூண்களும், மேற்புறமும், கீழ்ப்புறமும் சதுரமாகவும், நடுவில் எடுப்பட்டை கொண்டதாகவும் உள்ளன. கோண வடிவாக உள்ள போதிகையில் தரங்க அமைப்பு காணப்படுகிறது. போதிகையின் நடுவில் உள்ள பட்டையில் இங்குக் காணப்படுவது போன்று பூ வேலை வேறு எங்கும் இல்லை.

தூண்கள் மற்றும் அரைத் தூண்களில் தாமரை இதழ்கள் செதுக்கப்பட்டுள்ளன. இங்கு ஒவ்வொரு தாமரை இதழுக்கு நடுவில் வெவ்வேறு வடிவம் காணப்படுகிறது.

தென்புறமாக உள்ள அரைத் தூணின் மேற்புறத்தில் உள்ள தாமரை இதழுக்கு நடுவில் இரு யானைகளுடன் கூடிய திருமகள்—அஃதாவது—கசலட்சுமி வடிவம் காணப்படுகிறது. பாண்டிய நாட்டில் உள்ள குடைவரைக் கோயில்களில் வேறு எங்கும் கசலட்சுமி வடிவம் கிடையாது. மாமல்லபுரத்தில் வராக மண்டபம் மற்றும் பரமேசுவர மகாவராக விட்ணுகிரகம் எனப்படும் ஆதி வராகக் குடைவரைக் கோயில் ஆகிய இரு குடைவரைக் கோயில்களில் மட்டுமே பெரிய அளவிலான கசலட்சுமி வடிவம் உருவாக்கப்பட்டுள்ளது. திருமகள் செல்வச் செழிப்பைக் காட்டுவதாகவும், இருபுறமுள்ள யானைகள் நீருண்ட மேகங்களாகவும் கொள்ளப் படுகின்றன.

*"விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே*
*பசும்புற் றலைகாண் பரிது"*

என்பதல்லவா வள்ளுவர் வாக்கு! எனவே இவ் வடிவம் வான் சிறப்பைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

வடபுறம் உள்ள அரைத்தூணில் மேற்புறத்தில் உள்ள தாமரை இதழுக்கு நடுவில் சிங்கம் யானையுடன் போர் புரியும் காட்சி செதுக்கப்பட்டுள்ளது. தென்புறத்தூணில் மேற்புறமாக உள்ள தாமரை இதழுக்கு நடுவில் எருதும், வடபுறத்தூணில் யானையும் உருவாக்கப்பட்டுள்ளன. சிறிய அளவிலான இவ் வடிவங்கள் எழிலுடன் செதுக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாம்.

முகப்பினை அடுத்து மண்டபமும், அதனை அடுத்துக் கருவறையும் காணப்படுகின்றன. பொதுவாகப் பாண்டியர் குடைவரைக் கோயில்களில் உள்ளது போன்று இங்குப் பாறையிலேயே இலிங்கம் உருவாக்கப்படவில்லை. வேறு எந்தத் தெய்வத்தின் திருவுருவும் இல்லை. பிற்காலத்தைச் சார்ந்த விநாயகரும், பீடங்களும் உள்ளன. பீடத்தைச் செந்தமிழ் நூல் விரித்த முருகனாக இங்குள்ள மக்கள் வழிபாடு நடத்துகின்றனர்.

கருவறைக்கு இருபுறமும் வாயிற் காப்போர் அமைக்கப் பட்டுள்ளனர். இவர்கள் இருவரும் பல்லவர் பாணியில் மானிட உருவில் இரு கைகளுடன் செதுக்கப்பட்டுள்ளனர். வடபுறம் உள்ளவர் திரிபங்க நிலையில் கதையின்மீது சாய்ந்து காணப் படுகின்றார். தென்புறம் உள்ளவர் சமபங்க நிலையில் உருவாக்கப் பட்டுள்ளார். ஒரு கை இடுப்பில் ஊன்றியும், மற்றொரு கை அபய முத்திரையிலும் காணப்படுகின்றன. இவ் வடிவங்கள் நல்ல முறையில் அமைக்கப்படவில்லை.

இங்குள்ள குடைவரை பல்லவ மன்னன் மகேந்திரவர்மன் பாணியில் அமைந்துள்ளது. பிற்காலக் குடைவரைக் கோயில் களைப் போன்று இங்குப் புதை சிற்பங்களுக்கு முக்கியத்துவம் அளிக்கப்படவில்லை. எனவே இதன் காலத்தை 7ஆம் நூற்றாண் டாகக் கொள்ளலாம்.

———

## உண்மை வெளிப்படாமலா போகும்!

*பரதநாட்டியம் தோன்றித் தென்னகத்தே பரவி, இன்று வட இந்தியர்களாலும், உலகத்தினராலும் பாராட்டப்படும் உச்ச நிலையை எய்தியுள்ளது என்றால் பலர் நம்ப மறுக்கின்றனர். தமிழி லிருந்து கன்னடமும் களிதெலுங்கும் கவின் மலையாளமும் துளுவும் தோன்றின என்பதை எல்லாரும் நம்புகிறார்களா என்ன? என்றாலும் காலமும் சிந்தனையும் உண்மையை வெளிக்காட்டாமலா போகும்!*

சே. வைத்தியலிங்கன், எம்.ஏ., எம்.லிட்.,
(தமிழகக் கவின் கலை-மாட்சி, பக். 146)

## *திருக்குறளைச் சப்பானிய மொழியில் பெயர்த்த சப்பானியப் பேரறிஞரின் கடிதம்

செப்டம்பர், 15, 1981

அன்புள்ள டாக்டர் லோக முத்துக்கிருட்டிணன் அவர்கட்கு

என்னுடைய பெயர் இன்னமும் தங்களுடைய நினைவில் இருக்கும் என எண்ணுகிறேன். ஏனெனில் '-n Apple of Gold' என்னும் அழகிய புத்தகமொன்றைத் தாங்கள் பதிப்பித்துள்ளீர்கள்.

நான் திருக்குறளைத் தமிழில் மொழிபெயர்த்தவன். திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களின் அழைப்பின்பேரில் மதுரையில் நடைபெற்ற ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டிற்கு வந்துவிட்டுத் தாயகம் திரும்பியபோது, அவர் என்னைச் சென்னையிலுள்ள தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்கு அழைத்துச் சென்று திரு. சுப்பையாபிள்ளை அவர்கட்கு அறிமுகம் செய்து வைத்தார். திரு. சுப்பையாபிள்ளையவர்கள் இந்த முதிர்ந்த அகவையிலும் நல்ல உடல் நலத்தோடு இருந்து வருகிறார். அவர் **'An Apple of Gold'** என்னும் அந்தப் புத்தகத்தை என்னிடம் கொடுத்து என்னை வியப்பிலாழ்த்தினார்.

இந்தியாவிலிருந்தபோது திருக்குறளைப்பற்றி நான் என்ன எழுதிவிட்டு வந்தேனோ அதே சொற்றொடர்கள் அப் புத்தகத்தில் இருக்கக் கண்டு அளவிலா வியப்புற்றேன். அதே நேரத்தில் நன்றாக இல்லாத என்னுடைய கையெழுத்தைக் கண்டு நானே வெட்கப்பட்டேன். இந்தப் புத்தகத்தை வெளியிட்டவர் ஒரு டாக்டர் என்பதையும், அவர் தம்முடைய சொந்தச் செலவிலேயே இதனை வெளியிட்டுள்ளார் என்பதையும் கேள்விப்பட்டேன்.

என்னுடைய நன்றியையும் நன்மதிப்பையும் எப்படி வெளிப்படுத்துவதென்றே எனக்குத் தெரியவில்லை. தங்களுடைய முகவரியைத் தெரிந்திருந்தும் இதுகாறும் தங்கட்குக் கடிதமேதும் எழுதாமற்போனமைக்கு வருந்துகிறேன். இதனை மன்னிப்பதற்கே இடமில்லை.

தாயகம் திரும்பியதும், திருக்குறள் மொழிபெயர்ப்பைச் சொந்தச் செலவிலேயே பதிப்பிப்பது என முடிவு செய்தேன்.

---

* சென்னையிலுள்ள கழக ஆட்சியர் பேரர், புகழ்பெற்ற நரம்பியல் மருத்துவர் டாக்டர் லோக முத்துக்கிருட்டிணன் அவர்கட்கு எழுதிய கடிதம்.

அதற்காக நான் அரும்பாடுபட வேண்டியிருந்தது. இப்போது அப் பணி முடிந்தது. என் புத்தகத்தைத் தங்கட்கு அனுப்பு கிறேன். அதுவே, தங்களுடைய அன்புக்கு நான் செலுத்தும் நன்றியாகும்.

என்னுடைய உறவினர், நண்பர்கள், எங்கள் சமுதாயத்தில் முதன்மையானவர்கள், இந்திய நாட்டிடம் பற்றுக்கொண்டுள்ள பேராசிரியர்கள் ஆகியோர்க்கு இப் புத்தகத்தை வழங்கினேன். இதனால் **'திருவள்ளுவரும் அவரது குறளும்'** சப்பானில் படிப்படியாகப் பரவத் தலைப்பட்டுள்ளது.

அவ் வகையில் என்னைப்பற்றிக் கீழ்வரும் விவரங்களைத் தருகிறேன் :

**பெயர்:** சுசோ; குடும்பப் பெயர் : மட்சுனகா.

**பிறப்பு:** 1921இல்; **கல்வி:** சிசுவோகா உயர்நிலைப்பள்ளி, சிசுவோகா நகர்; ஹமாமட்சு நுண்கலைப் பயிற்சிக் கல்லூரியில் பயின்று, ஒகாசா பல்கலைக் கழகத்தில் இயைபியல் மேற்படிப்பு; நொதியியல் கலைப் பயிற்சி;

**தொழில்:** சிமேடா தொகை பல்ப் கம்பெனியில் இயைபியல் பொறியியலாளராகவும், ஆய்வுக்கூடத் தலைவராகவும் 1946—1976 வரை பணியாற்றல். தனிப்பட்ட முறையில் நுண்கலை மொழிபெயர்ப்பாளராகவும் பணி செய்தல்.

**மனைவி:** மிட்சுகோ, அகவை 57; **அன்னையார்:** யாசு, அகவை 83; மக்கள் மூவர். அவர்கள் தனித்தனியே வாழ்கின் றனர்.

சிமேடா எனும் ஊர் டோக்கியோவுக்கும் நகோயாவுக்கு மிடையே உள்ளது. டோக்கியோவிலிருந்து சின்கான்சென் என்னுமிடம் செல்ல 2 மணி நேரம் ஆகும். வாய்ப்புக் கிடைக்கும் போது ஒருமுறை வாருங்கள். நான் சென்னையில் ஓர் இதழ் அலுவலகத்தில் இருந்தபோது, சப்பானில் என்னைத் தேடி, சென்னை மருத்துவர் ஒருவர் வந்ததாகக் கேள்விப்பட்டேன். அது தாங்களாக இருக்கும்போலும். நான் தங்களை நேரில் பார்த்தால் மிக்க மகிழ்ச்சி அடைவேன். தங்களுக்கு ஓய்வு கிடைக்கும்போது எனக்குக் கடிதம் எழுதுங்கள்.

தங்கள் நன்றியுள்ள

**சுசோ மட்சுனகா**

# குறி கூறும் மகளிர்

[திருவாட்டி நிர்மலா மோகன், எம்.ஏ., எம். ஃபில்., மதுரை.]

0. கட்டு, கழங்கு, வெறியாடல் என்னும் மூவகையில் பண்டை மக்கள் குறி பார்த்த வழக்கத்தை,

> 'கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும்
> ஓட்டிய திறத்தார் செய்திக் கண்ணும்' (களவியல் சூ. 24)

என்னும் தொல்காப்பிய நூற்பா வரிகள் உணர்த்தி நிற்கின்றன. இவ் வழக்கம் இன்றும் நடைபெற்று வருகின்றது. குறி பார்க்கும் வழக்கத்தை முதன்மையாகக் கொண்டு எழுந்த சிற்றிலக்கியங்கள் குறமும், குறவஞ்சியும் ஆகும். சங்க இலக்கியந்தொட்டு எழுந்த பல்வேறு இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள குறி கூறும் மகளிர் தம் நிலைபற்றி விளக்குவதாக அமைந்துள்ளது இக் கட்டுரை.

1. 0. சங்க இலக்கியங்களில் குறி பார்க்கும் வழக்கம் பரக்கக் காணப்படுகின்றது. தலைவன்மீது கொண்ட மையல் காரணமாக நோயுற்ற தலைவியின் உண்மைநிலையை யறியாது. தம் மகளின் நோவுக்குக் காரணம் காண முற்படுகின்றனர். தலைவியின் செவிலித்தாயும் நற்றாயும்; குறி பார்க்கும் மகளிரை அழைத்துத் தலைவியின் நிலையை அறிய முற்படுகின்றனர். சங்கப் பாடல்கள் இம் மகளிரைப் பல்வேறு பெயர்களால் குறிப்பிடுகின்றன.

### 1. 1. அகவன் மகள் :

குறுந்தொகையில் குறி பார்க்கும் மகளிர் 'அகவன் மகள்' எனக் குறிக்கப்பெறுகின்றனர்.

> ''அகவன் மகளே அகவன் மகளே
> மனவுக் கோப்பன்ன நன்னெடுங் கூந்தல்
> அகவன் மகளே பாடுக பாட்டே
> இன்னும் பாடுக பாட்டே அவர்
> நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே'' (குறுந்தொகை 23)

என வரும் குறுந்தொகைப் பாடல் வாயிலாக, அகவன் மகள், சங்கு போன்ற நரைத்த கூந்தலையுடைய முதியவள் என்பதும், அவள் குறி சொல்லுமிடத்துத் தலைவனின் மலைச் சிறப்புக்களை அகவிப் பாடுதல் இயல்பு என்பதும் வெளியாகிறது. 'வெண் கடைச் சிறுகோல் அகவன் மகளிர்' (குறுந்தொகை 298) என வரும் மற்றொரு குறுந்தொகைப் பாடலடி, இவ்வகவன் மகளிர் கையில் சிறிய கோலை வைத்திருந்ததை உணர்த்தும். ''அகவன் மகளிர் வாயிலாகத் தோழி அறத்தொடு நின்று, தலைவியின் நோய்க்குரிய காரணத்தை மறைமுகமாக வெளிப்படுத்துகின்றாள்:

'அவர் நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டு' என்று கூறின் 'அவர் யார்?' என்னும் ஆராய்ச்சி தாயரிடையே பிறந்து உண்மையறிதற்கு ஏதுவாமாகலின் இஃது அறத்தொடு நிற்க லாயிற்று'' என உ. வே. சாமிநாதையர் கூறும் உரை விளக்கம் இங்குக் கருதத்தக்கது. (குறுந்தொகை ப - 58)

1. 2. அகநானூறு குறி கூறும் மகளிரை 'முதுவாய்ப் பெண்டிர்' (அகம். 22) என்றும், 'முதுவாய்ப் பொய்வல் பெண் டிர்' (அகம். 98) என்றும் குறிக்கின்றது. தலைவியின் நோய்க்குக் காரணம் கூற வந்த இம்மகளிர், 'பிரப்பரிசியைப் பரப்பி வைத்து, இது முருகனது செயலான் வந்த அரிய வருத்தம்' என்று பொய் யான காரணத்தைக் கூறுவதால் இவர்களைப் 'பொய் கூறல் வல்ல முதுமை வாய்ந்த பெண்கள்' எனப் புலவர் வெறிபாடிய காமக் கண்ணியார் குறித்துள்ளார் போலும்.

1. 3. நற்றிணை குறி கூறும் மகளிரைச் 'செம்முது பெண் டிர்' எனக் குறிக்கின்றது.

> ''நன்னுதல் பரந்த பசலைகண்டு அன்னை
> செம்முது பெண்டிரொடு நெல்முன் நிறீஇக்
> கட்டிற் கேட்கும்'' (நற்றிணை 288 : 5-7)

என வரும் நற்றிணைப் பாடலடிகள் முதுபெண்டிர் கட்டுப் பார்க்கும் வழக்கத்தைக் குறிப்பிடுகின்றது. ''சேரியின் முதுபெண்டாகிக் குறி சொல்லும் மாதரை மனையகத்துக் கொணர்ந்து வைத்து முறத்திலே பிடி நெல்லையிட்டு எதிரே தலைமகளை நிறுத்தித் தெய்வத்துக்குப் பிரப்பிட்டு வழிபாடு செய்து அந்நெல்லை நந் நான்காக எண்ணி எஞ்சியவை ஒன்றிரண்டு மூன்றளவும் முரு கணங்கெனவும் நான்காயின் பிறிதொரு நோயெனவும் கூறப் படுவது'' கட்டு எனப்படும். (பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் உரை விளக்கம், நற்றிணை ப. 492)

1. 4. குறிஞ்சிப் பாட்டில், 'அகலுள் ஆங்கண் அறியுநர் வினாய்' என்னும் அடி, குறி பார்க்கும் மகளிரை 'அறியுநர்' என வும் குறித்தமையைச் சுட்டுகின்றது. 'கட்டினாலும் கழங்கினாலும் எண்ணியறிவார்' என்பதால் அறியுநர் எனக் குறித்துள்ளனர் போலும்.

1. 5. சங்க இலக்கியச் சான்றுகள் வாயிலாகக், குறி கூறும் மகளிர், 'அகவன் மகள்' முதுவாய்ப் பெண்டிர்' 'முதுவாய்ப் பொய் வல் பெண்டிர்' 'செம்முது பெண்டிர்' 'அறியுநர்' என்னும் பெயர் களால் குறிக்கப்பட்டனர் என்பதும் கட்டுப்பார்த்து குறியுரைத்த இம் மகளிர் நரை மூதாட்டியர் என்பதும் பெறப்படும். குறி பார்க் கும் நரை மூதாட்டியரைக் கொண்டு கட்டுப் பார்த்தல் அல்லது நெற்குறி பார்த்தல் நிகழ்ச்சியினால் தலைவியின் நோய்க்கு

உண்மைக் காரணம் வேருக இருப்பினும், முருகணங்கு என்றே தெரியவரும். இதனுல் வேலனை அழைத்து வெறியாட்டுக் களம் அமைத்துக் கழங்குக் குறி பார்ப்பது சங்ககால வழக்கமாக இருந்தது.

"பொய்யா மரபின் ஊர்முது வேலன்
கழங்குமெய்ப் படுத்துக் கன்னந் தூக்கி
முருகென மொழியு மாயின்"

(ஐங்குறுநூறு, வெறிப்பத்து 245)

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடல் இதனை விளக்கும். எனவே வேலன் வெறியாடல் முருகனை வழிபடும் ஒரு சடங்காக அமைந்திருந்தது என்பது தெளிவாகும். மகளிரும் வெறியாடுதல் உண்டு என்பது குறுந்தொகைப் பாடல் ஒன்ருல் விளங்குகின்றது. 'தெய்வத்துக்குப் பலியாக இட்ட புதிய வளவிய கதிரைத் தெரியாது உண்ட மயில், தேவராட்டி வெறியாடுகின்ற அழகைப் போல வெய்துற்று நடுங்குகிறது' என்று வெறியாடும் மகளிரின் அழகு வருணிக்கப்படுகின்றது. (குறுந்தொகை 105). வேலன் அமைத்த வெறியயர் களத்தில் வெண்சிறு கடுகு தூவிக், கொழுமலர் சிதறிக், கொழுவிடைக் குருதியொடு, வெண்பொரி, தூ வெள்ளரிசி சில்பலிச் செய்து, குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள் முருகன் உவக்கும் இசைக் கருவிகளை ஒலிக்கச்செய்து இறைவன் இலன் என்பார் அஞ்சும்படியாக இம் முருகக் கடவுள் வரும்படி வழிப்படுத்தின நகர் என்று பழமுதிர் சோலையைக் குறிப்பிடும் திருமுருகாற்றுப்படையிலும் குறமகள் தெய்வமேறி ஆடும் நிகழ்ச்சி கூறப்படுகின்றது. (திருமுருகு. 221 - 244).

1. 6. சிலப்பதிகார வேட்டுவ வரியில், மறவர் குடியிற் பிறந்த சாலினி 'தெய்வத் தன்மையுற்று மெய்ம்மயிர் சிலிர்த்து, மூரி நிமிர்ந்த கைகளை ஒற்றையும் இரட்டையும் ஆக்கிவிட்டெறிந்து, கானவர் வியப்புறும்படி, அவ்வூரினது நடுவண் அமைந்த மன்றத்தின் கண்ணே தாளத்திற்கொப்பத் தன் அடிகளைப் பெயர்த்திட்டு' ஆடும் வெறியாடல் நிகழ்ச்சி இடம்பெறுகின்றது (சிலப். வேட்டுவ வரி 5 - 11).

1. 7. நெடுநல்வாடையிலும், முல்லைப்பாட்டிலும் இடம் பெறும் விரிச்சி கேட்டல்—செம்முது பெண்டிர் நெல்லும் மலரும் தூவிக் கைகூப்பித் தொழுது நற்சொல்கேட்டுக் காத்து நிற்கும் நிகழ்ச்சியும் ஒரு வகையில் குறி பார்த்தலேயாகும்.

## 2. கட்டுவிச்சி :

2. 0. இடைக்கால இலக்கியங்களில் குறி பார்க்கும் மகளிர் 'கட்டுவித்தி', 'கட்டுவிச்சி', 'கட்டறி மகடூஉ' என்னும் பெயர்களால் குறிக்கப்பெற்றுள்ளனர்.

**2. 1.** 'கட்டுவித்தி' என்னும் சொல்லை முதன்முதலில் கையாண்டவர் மாணிக்கவாசகர். நானூறு காதல் துறைகள் அமைந்த திருக்கோவையாரில், 283-285வது துறைகள் கட்டு வைப்பித்தல், கலக்கமுற்று நிற்றல், கட்டுவித்தி கூறல் என்பன வாகும். தலைவியின் மெலிவு கண்டு 'செவிலி தலைவியின் நோவைத் தெரிந்து சொல்லுமின்' எனக் கட்டுவித்திக்கு உரைக்க, அதைக் கேட்டுத் தோழி கலக்கமுற்று நிற்க, மயில், சேவல், வேல் என்று இவை நெல்லின் வடிவில் தோன்ற உள்ள படியால் முருகணங்கு ஒழியப் பிறிதொன்றுமில்லை எனக் கட்டு வித்தி நெற்குறி காட்டி முருகணங்கென்று கூறக்கேட்டு, 'இப் பிள்ளை இக்குடியிற் பிறந்து நம்மை இவ்வாறு நிற்பித்த பண்பினுக்கு வேலன் புகுந்து வெறியாடுக' என்று தாயர் அழைத்தலுமான செய்திகள் இடம்பெற்றுள்ளன. (திருக் கோவையார், பா. 283-286)

**2. 2.** நம்மாழ்வார் திருவாய்மொழியில் வெறியாடலைக் கடிந்து கூறுமிடத்துக் 'கட்டுவிச்சி' என்னும் சொல்லாட்சியைக் கையாண்டுள்ளார்.

*'இதுகாண்மின் அன்னையீர்! இக்கட்டுவிச்சிசொற் கொண்டுநீர்*
*எதுவானும் செய்தங்கோர் கள்ளும் இறைச்சியுந் தூவேன்மின்*
*மதுவார் துழாய்முடி மாயப் பிரான்கழல் வாழ்த்தினால்*
*அதுவே யிவளுற்ற நோய்க்கும் அருமருந் தாகுமே*
(திருவாய்மொழி 4:6-3)

**2. 3.** திருமங்கையாழ்வார் பாடிய சிறிய திருமடலில் கட்டுப் பார்க்கும் முறை கூறப்பட்டுள்ளது. தலைவி உற்ற நோயைப் போக்குவதற்குச் சிறந்த வழி கட்டுப் பார்த்தலேயாகும் என்று முதிய அன்னையர் கூற,

*"...........அது கேட்டுக்*
*காரார் குழல் கொண்டைக் கட்டுவிச்சி கட்டேறி*
*சீரார் சுளகில் சிலநெல் பிடித்தெறியா*
*வேரா விதிர்விதிரா மெய்சிலிர்க் கைமோவா*
*பேரா யிரமுடையான்; என்றாள்"* (சிறிய திருமடல் 19-23)

இங்குக் கட்டுவிச்சி, சுளகில் நெல்லைப் பரப்பிக் கட்டுப் பார்க்க முயல்கின்றாள். ஆயின் பண்டை இலக்கியத்தில் கூறப்பட்டது போல் ஒரு பிடி நெல்லை நந்நான்காக எண்ணிக் குறி பார்க்காமல் தெய்வமேறிக் குறியுரைக்கின்றாள். இக் கட்டுவிச்சி இளைய வயதினள் என்பதைக் 'காரார் குழல் கொண்டைக் கட்டுவிச்சி' என்னும் அவளைப்பற்றிய வர்ணனை உணர்த்தி நிற்கின்றது.

———

(தொடரும்)

# "கள்" விகுதி

[புலவர் இரா. கிருட்டிணன் (இராகி) பி. லிட்.]

'வன்றொடர்க் குற்றியலுகரத்தின் பின் மிகும்' என்னும் விதி, சொல்லொடு சொல் புணரும் பொருட்புணர்ச்சிக்கே பொருந்துவதாகும். விகுதி முதலிய இடைச் சொற் புணர்ச்சிக்கு ஏற்புடைத்தாகத் தோன்றவில்லை. இருவகை வழக்குகளையும் 'ஒப்பீட்டு முறையில்' உற்று நோக்கின் இது தெற்றெனப் புலப் படும்.

1. உலக வழக்கு :

(வீட்டுக்)கணக்குகள் ;

மக்குகள் ; நாக்குகள் ; வாக்குகள் ; கொக்குகள் ; விளக்குகள்;

(மூன்று) முடிச்சுகள் ;

கச்சுகள் ; வீச்சுகள் ;

(இரும்புப்) பூட்டுகள் ;

தட்டுகள், ஓட்டுகள்; முட்டுகள்;

மத்துகள் ; வித்துகள் ; வாத்துகள் ;

கொப்புகள் ; ஆப்புகள் ; தோப்புகள் ;

(தென்னங்)கீற்றுகள் ; நாற்றுகள் ; கூற்றுகள் ;

2. செய்யுள் வழக்கு :

[1]'மாதரம்' போற் "கொப்புகளும்"...

என்று கலைசைச் சிலேடை வெண்பாவும்,

[2]'மலக்குகள் வணக்கம் செய்தார்...'

என்று சீறாப்புராணமும்,

[3]'நாடியே வட்டுகள் ஆடிடுவோம்...'

என்று கவிமணியும்,

1, 2, 3. 'தமிழ் அன்றும் இன்றும்'—பக் : 65-68 திரு. மே.வீ.வே.

[4]"கோள்களாற் பலர் குத்துகளாற் பலர்...'

என்று கம்பரும், பிற்காலச் சான்றோர் பலரும் ஆண்டுள்ளனர்.

மிகுத்து எழுதுவதால் ஏற்படும் பொருள்மாறுபாட்டையும் காண்போம்.

**சான்றுக்கு ஒன்று :**

'தோப்புக்கள்' என்று மிகுத்தபோழ்து, 'தோப்பிலிருந்து இறக்கப்பட்ட கள்' என்னும் பொருள் தந்து, 'கள்' சொல்லாகி விடுகிறது. எனவே, 'தோப்புகள்' என்று மிகாமையே பன்மையைக் குறிக்கிறது எனலாம். இந் நிலையில் 'எழுத்துக்கள்' என்றால், எழுத்திலிருந்து இறக்கப்பட்ட 'கள்' என்று பொருளாகு மன்றோ! அப்படி ஒருவகைக் கள் இந்நாள் வரை இல்லையன்றோ! இப்படி யெல்லாம் எண்ணிப் பார்த்தால் நகைப்பிற்கு இடமளிக்கிற தன்றோ! எனவே, இனியாகிலும் ; வாழ்த்துக்கள், கருத்துக்கள், குறிப்புக்கள் என்றெல்லாம் மிகுத்து எழுதும் போக்கை நீக்கி,

"இனியொரு விதி செய்வோம்—அதை
எந்த நாளும் காப்போம்!"

என்று பாரதி சமுதாயத்திற்குப் பாடியது, இதற்கும் பொருந்து வதாக வுள்ளதை எண்ணி, 'இயைபப் புணர்த்தல் தெள்ளியோர் கடனு'யக் கொள்வோம்.

குறிப்பு : 'கருத்து' முதுப்பெரும் புலவர் உயர்திரு மே. வீ. வே. அவர்களுடையது.

---

4. கம்பராமாயணம். சுந்-காண்-கிங்க-பட. பா : 34.

---

## சுந்தரமூர்த்தி ஓதுவார் நினைவு விழா

தமிழிசைமணி தி. சா. சுந்தரமூர்த்தி ஓதுவார் அவர்களின் நினைவு விழா, சைதாப்பேட்டை சிவசுப்பிரமணியசுவாமி திருக்கோயில் திருமண மண்டபத்தில் அக்டோபர் 17, 18ஆம் நாள்களில் மிகச் சிறப் பாகக் கொண்டாடப்பெற்றது. முதல்நாள் சுந்தரமூர்த்தி ஓதவாரின் பட ஊர்வலத்துடன் தேவாரம் ஓதலும் திருக்கூட்ட மகளிரின் பண்ணிசையும் நடைபெற்றன. திரு. சுந்தரராமன் அவர்கள் தலைமையில் அறநிலையத்துறை ஆணையர் திரு. யு. சுப்பிரமணியன் அவர்கள் சுந்தரமூர்த்தி ஓதுவாரின் படத்தைத் திறந்துவைத்தார். திருவாளர்கள் கீ. இராமலிங்கனார், சுத்தானந்த பாரதி, டாக்டர் ஔவை நடராசன், திருக்குறளார் வீ. முனுசாமி, டாக்டர் மதுரை சோமு, குப்புசாமி முதலியார், டி. வி. நாராயணசாமி, சிவகுமாரன், ந.ரா. முருகவேள், ஊ. செயராமன் ஆகியோர் சிறப்புரை நிகழ்த்தினர்.

இரண்டாம்நாள் ஆ. விநாயக முதலியார் குழுவின் தேவார இன்னிசை நடைபெற்றது. வ. உ சி. சுப்பிரமணியன் அவர்கள் தலைமையில் அறிஞர் பலர் சிறப்புரையாற்றினர்.

# நான் கண்ட நல்லாசிரியர்

[பி. வி. கிரி, நிருபர்—'தமிழரசு']

புத்தாண்டு பிறக்கிறது!

புனிதமான அந்த நன்னாளில், குடும்பத்துடன் கோயிலுக்குச் செல்வோம். 'இவ்வாண்டு இனிய ஆண்டாக இருத்தல் வேண்டும்; நாட்டில் நலிவு நீங்க, நலங்கள் விளங்க அருள்புரிந்திட வேண்டும்' என்று இறைவனை வேண்டுவர். அப்படிச் செய்வது நல்லது தானே? ஆனால்... ஆனால்...

நானோ, புத்தாண்டு நன்னாளில் குடும்பத்துடன் முதன் முதலில் காண்பது ஒரு பெரியவரை—தமிழ் அறிஞரை—சமண முனிவரை!

அவர்தாம் 'ஜீவபந்து' எனச் சிறப்பிக்கப்பெறும் ஆருயிர்களின் அன்பர், பேரறிஞர் திரு. டி. எஸ். ஸ்ரீபால் அவர்கள்.

கடந்த 20 ஆண்டுகளாகத் தொடர்பு கொண்டவன் என்ற முறையில், என் கடந்த கால நிகழ்ச்சிகளைத் திரும்பிப் பார்க்கிறது என் மனம்.

முதன் முதலில் அவரோடு தொடர்பு ஏற்பட்டது, அவருடைய நூலுக்கு நான் 'அட்டைப்படம்' போட்டபோதுதான்! ஆம். நான் ஒரு குட்டி ஓவியனாக இருந்த காலத்தில், அவர் பிரபல ஓவியர்களைத் தேடி அழகான அட்டைப் படத்தைத் தம் நூலுக்குப் போட்டுக்கொள்ளாமல், தமிழார்வமிக்க இளம் ஓவியன் ஒருவனின் 'கற்றுக்குட்டி' படத்தைத் தம் ஆராய்ச்சி நூலுக்கு முகப்போவியமாகப் போட இசைந்தார் என்றால், அவரது இனிய பண்பினை என்னென்பது!

அவர் தமிழ்க் கடல். சமண சமயக் கருத்துக்களையெல்லாம், தமிழுலகம் உணர்ந்திடும் வகையிலே, தம்முடைய ஆழ்ந்த சிந்தனை முத்துக்களைக் கோத்து அழகிய தமிழ்மாலையாகத் தந்தவர். அவரைச் சந்திக்கும்போதெல்லாம் தமிழ் மணக்கும்; தெள்ளிய நீரோடைபோலச் சலசலக்கும்; சில சமயம் ஆலய மணி போல ஒலி முழங்கும்.

அவர் மிகச்சிறந்த எழுத்தாளர்—கவிஞர்--திறனாய்வாளர்—பேச்சாளர். 'ஆருயிர்க்கெல்லாம் அன்பு செய்தல் வேண்டும்'

என்ற கோட்பாடு கொண்டவர். அதன் விளைவாய் எழுந்ததே பலி ஒழிப்புப் போராட்டம். நாடு நகரங்களில், பட்டிதொட்டி களில் பலியிடும் மூடப்பழக்க வழக்கத்தை மண் போட்டு மூடி மறைத்தவர் மூதறிஞர் ஸ்ரீபால் அவர்கள்.

அவரை நான் பேட்டி கண்டிருக்கிறேன். நண்பர் என்ற முறையிலே அளவளாவியிருக்கிறேன். அவர் என் தமிழார்வச் செடிக்குத் தண்ணீர்விட்டு வளர்த்தவர்; தன்மானச் சுடருக்கு எண்ணெய் வார்த்தவர்.

அவர், திறமைக்கு மதிப்பு கொடுத்தார். திறமைக்கும், வயதுக்கும் தொடர்பில்லை என்பது அவரது கொள்கை. அவர் கடல்; நானோ கடுகு. என்றாலும் அவர் என்னை ஊக்குவித் தார்—எல்லாவற்றுக்கும் மேலாக மதித்தார்—அறிமுகப்படுத் தினார்—மகிழ்வித்தார்.

நான், சென்னை ஜெயின் உயர்நிலைப்பள்ளியில் படித்தவன். அங்கு இந்தி ஆசிரியராக இருந்தவர் திரு. சக்கரவர்த்தி என் பவர். ஒரு சமயம், ஜீவபந்து அவர்களுடன் நான் பேசிக் கொண்டிருந்தபோது, அந்த ஆசிரியர் அவருடன் இருந்ததைப் பார்த்தேன். என் பள்ளி வாழ்க்கை என் மனத்திரையில் படமாக ஓடியது. பிறகுதான் அறிந்தேன் திரு. சக்கரவர்த்தி அவர்கள், 'ஜீவபந்து' அவர்களின் உடன்பிறப்பாளர் என்று!

'நல்லறம்' ஏட்டினை நடத்தி, நல்லாசிரியராக விளங்கிய தமிழறிஞர் ஸ்ரீபால் அவர்களின் மறைவு, தமிழுலகுக்குப் பேரிழப்பு ஆகும் என்பதனைத் தமிழ் நெஞ்சங்கள் உணரும்.

புத்தாண்டு வருகிறது! புனிதனை எங்ஙனம் காண்பேன்?

———

## "கம்பராமாயண மாமேதை" தமிழ் மூதறிஞர் பி. ஸ்ரீ. ஆச்சார்யா மறைவு

'பி. ஸ்ரீ.' என்ற புனை பெயரில் அழைக்கப்பட்டவரும், வடமொழி, தமிழ் ஆகியவற்றில் வல்லுநரும் கம்பராமாயணத்தில் பற்றும் பயிற்சி யும் மிக்கவரும், கழக ஆட்சியர் வ. சு. அவர்களிடம் நீங்காத அன்பு கொண்டவரும், தமிழ் மூதறிஞருமான உயர்திரு பி. ஸ்ரீ. ஆச்சார்யா அவர்கள் கடந்த 28—10—81 புதன் கிழமையன்று நெல்லை விட்டிலா புரத்தில் 95 ஆவது அகவையில் திருமால் திருவடி அடைந்தார்கள் என்ற செய்தி அறிந்து வருந்துகிறோம். அப் பெரியாரை இழந்து வருந்தும் அவர்தம் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# செய்திகளும் குறிப்புகளும்

## திருக்குறள் பேரவை, சேலம் மாவட்ட மாநாடு

21, 22—11—81ஆம் நாள்களில் சேலம் தமிழ்ச்சங்கத்தின் சார்பில் சேலம் மாவட்டத் திருக்குறள் பேரவை மாநாடு, ஈழுக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன் அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. திரு. வீ. செ. கந்தசாமி, பி.ஏ., பி.லிட்., எல் எல்.பி அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர். பேராசிரியர் ந. இராமநாதன் தொடக்கவுரை நிகழ்த்தினர். திருவாளர்கள் இரா. சாரதி, பு. மனோகரன், நா. சண்முகம், புலவர் சி. இராமசாமி ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். இலக்கணப் புலவர் திருவாரூர் த.ச. தமிழன் 'குறள் நெறிச் சிந்தனையும் மொழியுணர்வும்' என்னும் பொருள் பற்றி உரையாற்றினர். தவத்திரு. குன்றக்குடி அடிகளார் நிறைவுரை ஆற்றினர்.

22—11—81இல் நடைபெற்ற கருத்தரங்கிற்குத் தவத்திரு குன்றக்குடி அடிகளார் தலைமை தாங்கினர். டாக்டர் கோ. சுடாமணி வரவேற்புரை நிகழ்த்தினர். சிலம்பொலி செல்லப்பனர், புலவர் செ. ஆறுமுகம், கு. ச. ஆனந்தன், டாக்டர் இரா. இளவரசு, தமிழ்க்குடிமகன், ந. இராமநாதன், பா. நமசிவாயம், தெ. ஞானசுந்தரம் ஆகியோர் கருத்துரையாற்றினர். மாநாட்டுச் சிறப்பு மலரினைப் பேராசிரியர் தி. வை. சொக்கப்பனர் வெளியிட்டார். பட்டிமன்றத்திற்குத் தவத்திரு குன்றக்குடி அடிகளார் நடுவராக இருக்க, வேலா இராசமாணிக்கனர் தொடக்கவுரை ஆற்ற, அறிஞர்கள் பலர் பங்குகொண்டனர். புலவர் சின்னாண்டார் நன்றி நவில விழா இனிது நிறைவேறிற்று.

## பேராசிரியர் சுந்தரம்பிள்ளை 127ஆவது பிறந்தநாள் விழா

மனோன்மணீய நாடகப் பேராசிரியர் சுந்தரம்பிள்ளை அவர்களின் 137ஆவது பிறந்தநாள் விழா 29—11—'81 அன்று சென்னைக் கலைவாணர் அரங்கில், கல்லூரிக் கல்வி இணை இயக்குநர் டாக்டர் கா. மீனாட்சிசுந்தரம் அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. பேராசிரியர் டாக்டர் மா. நன்னன் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர். மனோன்மணீய நாடகக் காப்பியம்பற்றிய கருத்தரங்கில் டாக்டர் நாகு, பேராசிரியர் இராசலட்சுமி, டாக்டர் குழந்தைவேலு, டாக்டர் இளவரசி ஆகியோர் பங்குகொண்டு உரையாற்றினர். டாக்டர் ஔவை நடராசன் அவர்கள் தலைமையில் நடைபெற்ற வழக்காடு மன்றத்தில் பேராசிரியர் இராசகோபாலன், பேராசிரியர் சோமு ஆகியோர் பங்கு கொண்டனர். கலைமாமணி சுப்பு ஆறுமுகம் குழுவினரின் வில்லுப்பாட்டும் நடைபெற்றது. மாலையில் நடைபெற்ற சிறப்புரைகட்கு மாண்புமிகு கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் தலைமை தாங்கினர். மாண்புமிகு அமைச்சர்கள் டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன், ச. இராமச்சந்திரன், கா. இராசா முகமது ஆகியோர் உரையாற்றினர். கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம் அமைத்த மனோன்மணீய நாட்டிய நாடகமும் நடைபெற்றது.

## அருள்மிகு தண்டபாணி அடிகளின் 143ஆவது பிறந்த நாள் விழா

சென்னைக் கந்தகோட்டத்தில் 22—11-81 அன்று, வண்ணச் சரபம் அருள்மிகு தண்டபாணி அடிகளின் 143 ஆவது பிறந்தநாள் விழா நடைபெற்றது. திரு. பி. என். கல்யாணசுந்தரம் குழுவினரால் திருப்புகழ் இன்னிசையும், தவத்திரு சுந்தர சுவாமிகள் முன்னிலையில் தண்டபாணி அடிகட்கு மலர் ஒப்பனையும் வழிபாடும் நடைபெற்றது. பின்னர்த் திருமுருகப் பெருமானுக்குத் திருமுழுக்கும் தண்டபாணி அடிகளின் வரலாற்றுச் சிறப்புப்பற்றிச் சுந்தர சுவாமிகளின் சொற்பொழிவும் நடைபெற்றன. குடந்தை வே. லட்சுமணன், தருமபுரம் சோ. ஞானப்பிரகாசம் ஆகியோரின் தேவார, திருப்புகழ் இன்னிசைக்குப் பின் புலவர் தி. மு. சங்கரலிங்கனார் நன்றி நவில விழா இனிது முடிந்தது.

## திரு. A. V. சுப்பிரமணியம் அவர்களின் நூல்கள் வெளியீட்டு விழா

கழக நூலாசிரியர்களுள் ஒருவரும், சென்னை, தென் இரயில்வே இணைப் பொது மேலாளருமான திரு. A. V. சுப்பிரமணியம் அவர்கள் எழுதிய நூல்களின் வெளியீட்டு விழா 25—11—81 அன்று, சென்னை பீட்டர்ஸ் சாலையிலுள்ள அதரோஷ் வித்தியாலய லஜபுத் ராய் மண்டபத்தில் நடைபெற்றது. சென்னை உயர்நீதிமன்ற நடுவர் மேதகு. எஸ். சுவாமிக்கண்ணு அவர்கள் தலைமை தாங்கினார்கள். ப. சுப்பிரமணியம், இராமானுஜ தாத்தாச்சாரியார், டாக்டர் ஔவை நடராசன், டாக்டர் என். வீழிநாதன், டாக்டர் எம். நரசிம்மமூர்த்தி, திருமதி பிரேமா பாண்டுரங்கம், திரு. பி. எஸ். இராமமூர்த்தி ஆகியோர் பாராட்டுரை வழங்கினர். திரு. A. V. சுப்பிரமணியம் அன்புரை வழங்கினார். கலைஞன் பதிப்பகம் திரு. மாசிலாமணி நன்றி நவில விழா இனிது முடிந்தது.

## புதுவையில் சுப்பிரமணிய பாரதியார் நூற்றாண்டுவிழா

புதுவை ஆண்டு திடலில் இத்திங்கள் 11, 12, 13ஆம் நாள்களில், பாரதியார் நூற்றாண்டு விழாவின் தொடக்க விழா நடைபெறுகிறது. 11—12—81இல் தொடக்க விழா புதுவை முதல்வர் மாண்புமிகு தெ. இராமச்சந்திரன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டுறவு அமைச்சர் மாண்புமிகு வே. கதிர்வேல் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர், மைய அரசின் உள்துறை அரசாங்க அமைச்சர் மாண்புமிகு. பி. வேங்கடசுப்பையா தொடக்கஉரை நிகழ்த்தினர். பேராசிரியர் அன்பழகன், ப. சண்முகம், எம். ஏ. சண்முகம், டாக்டர் எஸ். இராமகிருஷ்ணன், புலவர் கீரன் ஆகியோர் சிறப்புரை ஆற்றினர். மாவட்ட ஆட்சியாளரும் கழக நூலாசிரியர்களுள் ஒருவருமான திரு. பி. எல். சாமி அவர்கள் நன்றி நவின்றார். இவ்விழாவினையொட்டி வழக்காடுமன்றம், மகளிர் உலகம், பாடல் உலகம் (இசையரங்கு) ஆகிய நிகழ்ச்சிகளும்

இடம் பெற்றன. இங்ஙனமே தமிழக அரசு எட்டயபுரத்தில் 11, 12, 13 ஆம் நாள்களில் பாரதியார் நூற்றாண்டு விழா நடத்துகிறது. இவ் விழாக்கள் பற்றிய செய்திகள் அடுத்த இதழில் வெளியிடப்பெறும்.

### திருவெம்பாவை, திருப்பள்ளியெழுச்சி சொற்பொழிவுகள்

சென்னை இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தசன சபையின் சார்பில் 29—12—81 முதல் 9—1—82 முடிய "குகானந்தநிலைய" தெய்வத்தானத்தில் சென்னைத் துறைமுக முன்னாள் அதிகாரி சைவப் பிரசங்கமணி திரு A. T. A. ஈஸ்வர், A M.N.F.S.C, A.F I.C.D. (Lon.) A.R S.H. (Lon.) அவர்கள் விரிவுரையாற்றுவார்கள். சிவத்திரு. C. M. சிவராமன் செட்டியார் அவர்கள் சொற்பொழிவினைத் துவக்கிவைப்பார்கள். திரு. சு. சுந்தரம் அவர்கள் திருவெம்பாவை, திருப்பள்ளி யெழுச்சிப் பாடல்கள் பாடுவார்கள்.

### மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு-நிசு, ௧௭௪ஆம் பக்கத் தொடர்ச்சி)

உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள்
கழக ஆட்சியாளர் ரூ. 10—00
,, ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் 5—00
,, A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை 5—00
,, தமிழிசைச் செல்வர் பொ. மாணிக்கவாசகம்
அவர்கள் 79ஆவது பிறந்தநாள் (26—10—81) 5—00
,, பேரா. இராஜாராம் அவர்கள், அரசினர் கலைக்
கல்லூரி, சித்தூர் பாலக்காடு. 101—00

———

## மதிப்புரை

### தமிழ் எழுத்துச் சீர் திருத்தப் புரட்சி

[ஆசிரியர்: குடந்தை வீரா. இராசகோபாலன், B. O. L., M. A., சேது அம்மாள் பதிப்பகம், 57, பெருமாள் முதலி தெரு, இராயப் பேட்டை, சென்னை-14. விலை: ரூ 5]

"பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையி னானே" என்பதற்கேற்பத் தமிழ் எழுத்துகளிலும் சீர்திருத்தம் காண வேண்டுமென்பதில் அறிஞர்களிடையே என்றும் கருத்து வேறுபாடு இருந்ததில்லை. ஆனால் அதனைச் செய்வது எப்படி என்பதில்தான் பல்வேறு கருத்துகள் நிலவி வந்தன—வருகின்றன. தந்தை பெரியார் அவர்கள் தம் இயல்பிற்கேற்ப அதனை விரைந்து செயல் படுத்திக் காட்டினார். அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி போன்றோரும், மற்றும் தமிழறிஞர் பலரும் இதற்கென ஒரு குழு அமைத்து ஆய்ந்து முடிவு செய்யக் கருதினர். இந் நிலையில் அண்ணா அவர்கள் மறையவும்,

ஆட்சி மாற்றம் ஏற்படவும், இந்நாள் அரசு சீர்திருத்தம் செய்து காட்ட விரும்பிச் சில மாற்றங்களைச் செய்துள்ளது. இந் நிலையில்தான் 'தமிழ் எழுத்துச் சீர்திருத்தப்புரட்சி' என்ற இந் நூல் வெளி வந்துள்ளது. நூல் பல நல்ல கருத்துகளையும், புதிய வழிமுறைகளையும் எடுத்துக் காட்டு களோடு எடுத்துக் காட்டிப் பெயருக் கேற்பப் புரட்சிகரமாகவே அமைந் துள்ளது ஆயினும் இது போன்ற கருத்துகள், தமிழாய்ந்த தமிழர் களால் இயக்கப்படும் ஓர் அரசின் ஆய்வுக்கு உரித்தாதல் வேண்டும். அஃதொன்றே சீரிய பயன் தரும் சீர்திருத்தமாகும். இந்நூலாசிரியரின் முயற்சி பாராட்டத் தக்கது.

## விருந்து—சிறுகதைத் தொகுப்பு

[தொகுப்பாசிரியர்: க. தமிழ் மல்லன், க. இ., கல். இ. தனித் தமிழ்க் கழகம், தட்டாஞ் சாவடி, புதுச்சேரி-605009. விலை ரூ. 5-00]

கதைகளைத் தனித் தமிழில் எழுதினால் எடுபடாது; சுவையிராது, என்றெல்லாம் கூறுவோர் பலர் உளர். அத்தகையோர் வடமொழி கலப்பையும் கடந்து ஆங்கிலக் கலவை மொழியில் கொச்சை நடையில் பல சிறுகதைகளையும் தொடர்கதைகளையும் நாட்டிலே நடமாட விட்டுத் தமிழ்மக்களின் மொழியறிவைக் குலைக்கத் தொடங்கியிருக்கும் இவ் வேளையில் இந்த 'விருந்து' என்னுஞ் சிறு கதைத் தொகுப்பு வெளி வந் திருப்பது பாராட்டத்தக்கது மட்டுமன்று, இஃது ஒரு நல் விருந்துமாகும். புலவர் தி நா. அறிவொளியின் 'நன்கொடை' முதல் திரு. செய சீலனின் 'பரிசு' முடியப் பன்னிரண்டு கதைகள் உள்ளன. அனைத்தும் இனிமை யும் எளிமையும், சுவையும் நிரம்பிய பயனுள்ள கதைகள். தொகுப் பாசிரியரின் தனித்தமிழ் முயற்சி பாராட்டத்தக்கது.

## பேரின்பம்

[ஆசிரியர்: திருமுருக கிருபானந்தவாரியார். தொகுப்பாசிரியர்: சீனி. திருநாவுக்கரசு, 435, டாக்டர் ஏ. ஆர். எம். ரோடு, கருணாநிதி நகர், சென்னை-78, விலை: ரூ. 6-00]

அரிய பெரிய சமயக் கருத்துகளைத் தெளிவாகச் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதில் கைதேர்ந்தவர் திருமுருக கிருபானந்தவாரியார். அவருடைய சொற்பொழிவுகளில் பல அனுபவ உண்மைகள் நகைச் சுவை கலந்து வெளிப்படும். இங்ஙனம் அவை கற்றவரையும் மற்றவரையும் சிந்திக்க வைக்கும். வாரியார் அவர்கள் அவ்வப் போது பேசிய பல கருத்துகளைத் தொகுத்துப் பேரின்பம் என்னும் தலைப்பில் அழகிய நூலாக வெளியிட்டுள்ள தொகுப்பாசிரியர் திரு. சீனி. திருநாவுக்கரசு அவர்களின் முயற்சி பாராட்டத்தக்கது. பேரின்பம் எது? அஃது எத்தன்மையது என அறிய விழைவோர் இப் புத்தகத்தை ஒருமுறை படித்துப் பார்ப்பது நல்லது.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.

கழக நிலையங்களில் கிடைக்கும்

# பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| பாரதியாரும் தமிழ்ப் புலவர்களும்—பெ. சு. மணி | 10 | 00 |
| பழங்குடி மக்கள்—டாக்டர் சு. சக்திவேல் | 10 | 00 |
| பாரதிக்குப்பின் தமிழ் உரைநடை—வல்லிக்கண்ணன் | 11 | 00 |
| நாட்டார் வழக்காற்றில் ஆய்வுகள்—தே. லூர்து | 25 | 00 |
| ரேடியோ டெலிவிஷன் ஏரியல்—வ. அருணாசலம் | 10 | 00 |
| உத்தராயணம்—லா. ச. ராமாமிருதம் | 8 | 25 |
| வெளிச்சம் வெளியே இல்லை—மு. மேத்தா | 4 | 50 |
| கால்நடை வளர்க்கும் புதிய முறைகள்—ஆர். பெருமாள்சாமி | 14 | 50 |
| செலவில்லாத சுலப வைத்தியம்—என். ஜனார்த்தனன் | 5 | 00 |
| இலக்கிய மலர்கள்—மு. மு. இஸ்மாயில் | 17 | 50 |
| கம்பர் யார்?—டி. கே. சி. (மறுபதிப்பு) | 5 | 00 |
| மனம்போல் வாழ்வு—கவிஞர் கண்ணதாசன் | 5 | 00 |
| நம்பிக்கை மலர்கள் ,, | 5 | 00 |
| அம்பிகை அழகு தரிசனம் ,, | 4 | 50 |
| நமது செல்வம்—மீ. ப. சோமு | 12 | 50 |
| வில்லிபாரதத்தில் தமிழுணர்ச்சி—ம. பொ. சிவஞானம் | 6 | 50 |
| தெய்வத் திருவிளையாடல்கள்—திருமருகல் சிங்காரவேலனார் | 8 | 00 |
| யார் மகளோ—டாக்டர் தா. ஏ. ஞானமூர்த்தி | 6 | 75 |
| இலக்கியத்தில் அறிவியல்—பி. எல். சாமி, ஐ.ஏ.எஸ். | 15 | 00 |
| திருக்குறள் மரபுகள் (ஆய்வு-7)—டாக்டர் கு. மோகனராஜ் | 35 | 00 |
| தமிழ்த் தென்றல் திரு. வி. க.—டாக்டர் ஈ. ச. விசுவநாதன் | 8 | 50 |
| Unmai Vilakkam—C. N. Singaravelu | 6 | 00 |
| An Introduction to Tamil Literature—N. Subramaniam | 10 | 00 |
| The Sacred Kural of Tiruvalluva Nayanar—with Introduction, Grammar, Translation, Notes, Lexicon and Concordance—Rev. G. U. Pope | 95 | 00 |
| Ancient Temples of Tamil nadu —Prof. A. M. Pramasivanandam | 30 | 00 |
| Abithana Chintamani-(An Encyclopeadia of Tamil Literature)—A. Singaravelu Mudaliar | 200 | 00 |

# கழகப் புதிய வெளியீடுகள்

## திருவிளையாடல் சொற்பொழிவுகள்
(பேராசிரியர் பன்னிருவர் சொற்பொழிவுகள்)

திருவிளையாடல் புராணம் இலக்கியச்சுவையும் பத்திச் சுவையும் நிரம்பிய புராணம். இப் புராணத்தின் இலக்கிய நயத்தினையும், கற்பனை வளத்தினையும் எல்லாரும் அறிந்தின்புறும் வகையில் தொகுக்கப்பெற்றதே இச் சொற்பொழிவு நூல். ஆராய்ச்சித் திறம்படைத்த பேராசிரியர் பன்னிருவர் ஆற்றிய சொற்பொழிவுகள் இதில் இடம்பெற்றுள்ளன. 3363 பாடல் களைக்கொண்ட இப் புராணத்தின் சாரத்தை இச் சொற்பொழிவு நூல்மூலம் எளிதில் தெரிந்துகொள்ளலாம். இலக்கிய ஆராய்ச்சி யாளர்க்கு இந்நூல் பெருந்துணை புரியவல்லது. நூலகங்கள் தோறும் இருக்கவேண்டிய அரிய நூல். விலை ரூ. 20 00

## சங்ககாலத்துப் பிராமிக் கல்வெட்டெழுத்துக்கள்
ஆசிரியர்: வரலாற்றுப் பேரறிஞர் மயிலை சீனி வேங்கடசாமி

வரலாற்றாசிரியர்கட்குப் பயன்படக்கூடிய சான்றுகளுள் கல்வெட்டுக்கள் மிகமிக இன்றியமையாதவை. இங்கப் பிராமிக் கல்வெட்டெழுத்தாராய்ச்சிகளினால் பல அரிய உண்மைகளை எடுத்துக் காட்டுகிறார் இந்நூலாசிரியர். பதினெட்டுத் தலைப்புக் களில் பல ஊர்களிலும் குகைகளிலும் கண்டறிந்த கல்வெட்டுச் செய்திகள் இதில் கூறப்படுகின்றன. வரலாற்றாசிரியர்கட்கு இன்றியமையாது தேவைப்படும் நூல். விலை ரூ. 12 00

## வாழ்வாங்கு வாழ்ந்தவர்கள்
ஆசிரியர்: பேராசிரியர் மா. பா. குருசாமி, எம்.ஏ., டி.ஜி.டி.

இந் நூலாசிரியர் அவ்வப்போது இதழ்களில் எழுதிவந்த— வரலாற்றுச் சிறப்புமிக்க தலைவர்களுள் இளைஞர்கள், கற்றுப் பயனடையவேண்டிய இருபத்துநான்கு தலைவர்களின் வரலா றுகள் சுருங்கச்சொல்லி விளங்கவைக்கும் வகையில் 'வாழ்வாங்கு வாழ்ந்தவர்கள்' என்ற தலைப்பில் வெளியிடப்பெற்றுள்ளன. பள்ளி நூலகங்கள்தோறும் இன்றியமையாது இருக்கவேண்டிய வாழ்க்கை வரலாற்று நூல். விலை ரூ. 2 00

## Sacred Kural—The Kindly Light
ஆசிரியர்: கே. சி. கமலையா

தமிழறியாத பிற மொழியினர் திருக்குறள் கருத்துகளைத் தெளிவாகப் புரிந்துகொள்ளும் வகையில் 1330 குறட்பாக்களுள் ஏறக்குறையப் பாதிக்கு மேற்பட்டவற்றின் சாரம் உலகப் பொதுமொழியாகிய ஆங்கிலத்தில் இனிய எளிய நடையில் இந்நூலில் தரப்பட்டுள்ளது. அத்துடன் ஜி. யூ. போப், லாசரஸ், ட்ரு போன்ற ஆசிரியர்களின் விளக்கமும், தமிழ்நாட் டறிஞர்களின் ஆங்கில ஆக்கமும் இத்துடன் இணைக்கப்பெற் றுள்ளன. விலை ரூ 5 00